உ

சிவசிவ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



# திருவருட்செல்வரின் சரிதமும் - கற்பனையும்

## முதற்பகுதி

ஸ்ரீ சம்பந்த சரணலய சுவாமிகள் என்னும் சிவக்கவிமணி,

C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் எழுதிய

பெரியபுராணப் பேருரையினின்றும் தொகுப்பு

மலர் வெளியீடு :

அன்பகம்

அம்பாசமுத்திரம் - 627 401




உ
சிவசிவ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்



# திருவருட்செல்வரின் சரிதமும் கற்பனையும்

முதற்பகுதி

## திருமலைச் சருக்கம்
## தில்லைவாழ் அந்தணர் சருக்கம்
## இலைமலிந்த சருக்கம்

ஸ்ரீ சம்பந்தசரணாலய சுவாமிகள் என்னும் சிவக்கவிமணி,
C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள்
எழுதிய
பெரியபுராணப் பேருரையினின்றும்
தொகுப்பு

---

அன்பகம், அம்பாசமுத்திரம்-627401.

---

சைவமும் தமிழும் தழைத்தோங்குக!

சைவ இளைஞர்க்கு
இலவசம்

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

# நூன் முகம்

1. உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய, சிவனருளை நாடிப் பொருந்தி, என்றும் இன்பம் பெருகும் இயல்பினால் ஒன்றி வாழ்ந்தவர், ஒள்ளியசீர் சிவத்திருத்தொண்டர், அவரது மெய்ச்சரிதங்களே நம்மை நன்னெறி உய்க்க வல்ல வழிகாட்டி.

2. உலகம்போற்றும் உயர் தனித்தண்டமிழ்ச் செம்மொழியில் உள்ள நன்னூல்கள் யாவினும் "மேலாந்தரம்" வாய்ந்தவை. ஆறு நூல்கள் என நமது அருமைச் சைவ சந்தானகுரவர் ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் உறுதி கூறியுள்ளார்கள்.
"வள்ளுவர் சீரன்பர் மொழிவாசகம் தொல்காப்பியமே
தெள்ளு பரிமேலழகன் செய்தவுரை - ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாந்தரம்"

3. புத்தி இலக்கியமான திருக்குறள், வழிவளரும் பத்தி இலக்கியம். பத்தி இலக்கியமே ஞான சித்தி இலக்கியம் வழி இன்பம் மன்னுவிக்கும் என்பதை நயமுடன் நாட்டி, நடு நாயகமணியாகத் திருத்தொண்டர் புராணத்தைப் பாடலின் நடுவண் ஆண்டிருக்கும் அழகே அருமை!

4. திருத்தொண்டர் புராணப் பேருரையைத் தொகுத்து விரிவுரையாக்கி, அதனையே இறுதியில் சுருக்கியும் தந்துதவிய சைவ உலக மகோபகாரி, கோவை, சிவக்கவிமணி திரு C.K. சுப்பிரமணியமுதலியார் B.A., என்ற ஸ்ரீ சம்பந்த சரணாலய சுவாமிகள் ஆவார்.

5. அன்னாரது பேருழைப்பின் பேருபகாரத்தை சைவ இளைஞர் இனிது நுகர்ந்து, மேலும் தூய்த்திடத் தூண்டும் இச்சிறு ஆன்மீக வளர்ச்சிப் பணியில், முதற்கண் திருநாவுக்கரசு சுவாமிகள், தொடர்ந்து திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஆகிய இரு பெருமக்களது சரிதமுங் கற்பனையும் என்ற இரு சிறு நூல்களை, இளைஞர்க்கு இலவசமாக ஈந்திட இறையருள் இசைந்தது, இன்று, பின் தொடர்வது, இலைமலிந்த சருக்கத்தில் இடம் பெறும் ஏழு சிவத்திருத்தொண்டர்களது சரிதமும் கற்பனையுமாகும். (கற்பனை—நீதி). தொடர்ந்து ஏனைய திருத்தொண்டர் சரிதங்களையும் வெளியிடத் தில்லை ஆனந்த-மா நடராசப்பெருமான் தன் தூக்கிய திருவடியே துதித்து வாழ்வோம்.

6. திருவள்ளுவர் மெய்ந்நெறியிலும், திருத்தொண்டர் செந்நெறியிலும், ஆழ்ந்த உணர்வு, உறுதி, ஊக்கம் சான்ற வித்தகராகி விளங்கி, எங்குடி முழுவதும் விளங்க அருளுதவி ஈந்த பெரியார், எம்மாதாமகர் ஆன, அம்பாசமுத்திரம் - அன்பகம், உயர்திரு. **வி. சு. ஆறுமுகம் பிள்ளை அவர்கள். [1888–1979]** இப்பெரியார் வேளாண்மை, வாணிபம், வங்கி மேலாண்மை திருநெல்வேலி தென்னிந்தியா வங்கியின் செயலாளர், (இந்நாள்—தமிழ்நாடு வங்கி) எனப் பல்வேறு துறைகளிலும் பலகாலம் பயின்ற பன்னெடும் அனுபவச் செல்வர்; உற்றவர்க்கு உரிமையின் உதவும் நற்றவப் பண்பு சான்றவர்; உறவினர், நண்பர், சுற்றத்தார் வழி வரும், தக்க இளையவர் கல்வி பயில, உடல் பிணியகல, உற்றுழி உதவும் சிலர்; ஒக்கலும் நண்பரும் பெறத் திருமணப் பரிசாக, தவறாது 'தேவர் குறளை' உரையுடன் கூடிய ஒன்றை உவந்து அளிக்கும் உயர் நியதி போற்றியவர்.

7. ஆயிரம் பிறை தொழுது, அரன் சரணே சரணாக எய்திய அப்பெரியாரது ஆன்ம நேய நினை வஞ்சலியாக, இந்நிரலே வரும் ஐந்து நூல்களும் சைவ இளைஞர் உலகம்,

அன்பு நெறியை அறிந்து அணுகி, அகப்பட்ட. ஆனந்தானுபவம், அடைந்து மகிழ்ந்திட மன, மொழி, மெய்ப்பணி செய்துவெல்ல '**நம் இளைஞர் சமுதாயத்திற்கு சமர்ப்பணம்**

8. இந்நூலினை மூல நூலினின்றும், திரட்டித் தொகுத்துப் பிரதி செய்து உதவிய பெரியார்கட்கும், அச்சியற்றும் பணி பலவிலும் பங்கேற்றுதவிய திருவாளர். **வி. ஆறுமுகம்**, M. A., B. L.. அட்வகேட், பாளையங்கோட்டை அரிமா சங்கத் தலைவர் அவர்கட்கும், சீரிய முறையில் அச்சிட்டு உதவிய திரு. **கிருத்திகா அச்சகத்தாருக்கும்** எங்கள் நன்றி என்றும் உரியன.

9. செயற்கரிய செய்வாரான சைவப் பெரியார்தம் சிவகதை அறிந்து அன்புநெறி பயின்று இன்பமே கூடி, நம் இளைஞரும், பெண்மகாரும் சிவனருள் பெற்று மகிழ்வார்களாக.

இங்ஙனம்,

**1—12—1988**

**அன்பகம்,**
**அம்பாசமுத்திரம்**

**சு. விநாயகம்**, B. SC., Ag.
ஆறுதல் வேதனம் பெறும்
விதைச்சான்று இயக்குநர்,
தமிழ்நாடு அரசு.

**Dr. சு. ஆறுமுகம்,**
M. B. B. S., M. SC.,
F. A. C. P., F. I. A. M. S.,
F. I. C. S. F. M. M. C.
ஆறுதல் வேதனம் பெறும்
மருத்துவக் கல்வித்துறை
இயக்குநர், தமிழ்நாடு அரசு.

**சு. மீனாட்சிசுந்தரம்.**
பாத்திர வாணிபம் - நிலக்கிழார்,
திருநெல்வேலி.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருத்தொண்டர் புராணம்

## சுருக்கம்

## திருமலைச் சருக்கம், திருமலைச் சிறப்பு

### புராண சாரம்

மல்கு புகழ் வன்றொண்டர் அருளாலீந்த
வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை
நல்கும் வகை புல்கும் வகை நம்பியாண்டார்
நம்பி திருவந்தாதி நவின்ற வாற்றுற்
பல்குநெறித் தொண்டர்சீர் பரவ வல்ல
பான்மையார் எமையாளும் பரிவால் வைத்த
செல்வமிகுந் திருத்தொண்டர் புராண மேவுந்
திருந்து பயனடியே னுஞ் செப்பலுற்றேன்.

திருமலை என்பது திருக்கயிலாய மலையாம். அது தேவர்களும், முனிவர்களும், பூதகணங்களும் சூழ்ந்திருப்பது. இதனைக் காவல் புரிபவர் நந்தியெம்பெருமான். இதன் ஒரு சாரலில் பல முனிவர் சூழ உபமன்னிய முனிவர் தவஞ்செய்து கொண்டிருந்தபோது ஒரு நாள் பெரிய சோதி ஒன்று தெற்கில் தோன்றிற்று. அது கண்டு முனிவர் இது என்ன அதிசயம் என்றனர். உபமன்னிய முனிவர் இறைவனைச் சிந்தித்து அந்தச் சோதி கயிலைக்குத் திரும்பி வருகின்ற நம்பியாரூரரின் சோதி என்று உணர்ந்து தொழுதனர். சிவனையன்றி ஒருவரையும் தொழாத அவர் தொழுத காரணத்தை முனிவர் வினவினர். "இங்கு வருகின்றவர் நம்பியாரூரர் சிவசமானமானவர்" என்று சொல்லி "அவர் கயிலையிலிருந்து இரண்டு சேடியரை

நந்தனவனத்திற் கண்ட காட்சியின் பொருட்டு, இறைவனது ஆணையின்வழிப் பூவுலகில் அவதரித்து. இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பெற்றுத் திருத்தொண்டத்தொகையை அருளிச் செய்து, அவ்விருசேடியர்களையும் மணந்து, பின்னர் இங்குத் திரும்பி வருகின்றார்'' என அவர் சரிதம் முழுதும் சொல்லியருளினார். அவர் அவதரிக்க நேர்ந்ததென்றிசை இறைவனைப் பூசித்துப் பேறுபெறத்தக்க பல சிவதலங்களையும் உடையது என்று அதன் பெருமையையும் கூறியருளினார்.

அன்று அம்முனிவர் அங்குச் சொன்னபடி இங்கு இப் புராணம் சொல்லப்பெறுகின்றது. இதற்குப் பதிகமாவது அத் திருத்தொண்டத்தொகையேயாம். அந்தப் பதிகத்திற்கண்ட அடியார்களை நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருவந்தாதியிற்றுதித்த வகையின்படி இச்சரிதங்களை விரித்துக் கூறுகின்றோம் என்பது இப்பகுதியின் சுருக்கம்.

## கற்பனை

இப்பகுதியிலிருந்து சிவபெருமானே பரம்பொருளாவார் என்பதும் திருத்தொண்டர் சரிதவரலாறு இன்னதென்பதும், சிவபுண்ணியம் செய்யும்போது வேறு நினைவுகள் வரலாகாதென்பதும், தெரிந்து கொள்ளத்தக்கன என்று ஆறுமுகநாவலரவர்கள் தமது பெரிய புராணச் சூசனத்துட்காட்டியுள்ளார்கள்.

முன்னே செய்த பல கருமங்களுக்கு ஈடாக இப்பிறவி பெற்ற நாம், எதற்காக இப்பிறவி எடுத்தோமோ, அதை மறந்து. மேன்மேலும் மயங்கிப், பல கருமங்களும் செய்து மூட்டை கட்டி. மேன்மேலும், பிறவிகளுக்கு இடஞ்செய்து கொண்டே போகிறோம். ஆனால் நாம் அனுபவிக்கவேண்டிய கருமம் எது? புதிதாகத் தேடிக்கொள்ள நின்ற கருமம் எது? என்று நமக்குத் தெரிந்துகொள்ள முடியாது. ஆதலின் நாமும் சுந்தரர், கயிலையில், இறைவனை வேண்டிக்கொண்டதுபோல வாராத புதுக்கருமத்தை, நாம் தேட உள்ள சமயத்தில் தடுத்து

ஆட்கொள்ளும்படி வேண்டிக்கொள்வோமாயின், வேண்டு வார் வேண்டுவதே கொடுக்கும் இறைவன் அவ்வாறே அருளுவன். நாமும் வந்த காரியம் பார்த்துக்கொண்டு வீடு சேர்வோம். இது இப்பகுதியாற்பெறும் முக்கிய கற்பனைகளில் ஒன்ருகும்.

## திருநாட்டுச் சிறப்பு

**சுருக்கம் :**

இப்பகுதியிற் சோழர்களது காவிரி நாட்டின் செழிப்பும், சிறப்பும், கூறப்பெற்றது. வடக்கில் இமயமலையிலிருந்து தெற்கே வந்த அகத்தியர், கமண்டலத்திற்கொண்டுவந்த நீர். அக்கமண்டலம் கவிழ்க்கப்பட கொங்கு நாட்டிற்கு அருகிலே பெருகிக் காவிரியாய் ஓடிற்று. அது சோழநாட்டிற் பாய்ந்து அந்நாட்டை வளஞ்செய்யும். அதன் புதுநீர் வயல்களிற் புகப் பெற்று நாறுநடுதல் முதலிய உழவுச்செயல்கள் அந்நாட்டு உழவர், உழத்திகள் மகிழ்ச்சியுடன் செய்து விளைவுப்போகம் பெறுவர். நெல் அந்நாட்டுச் சிறந்த விளைபொருளாம். கரும்பு, வாழையும், கமுகும் மலிந்து விளைவன. பூஞ்சோலைகளும், பழச்சோலைகளும், மரச்சோலைகளும் விளங்கும். மக்கள் மனையறத்தில் மகிழ்ந்து வாழ்ந்தனர். அறநூல். விதித்த விதி விலக்குகளை, அறிந்து நல்லொழுக்கத்தில் வாழ்ந்து வந்தனர் இறைவன் கோயில்களின் பூசையும், மக்கள் திருவைந் தெழுத்து ஓதுதலும் சிறப்பாய் பெருகுதலால் அந்நாடு, பிணி முதலிய கொடுமைகளின்றி சுகம் பெற்றிருந்தது. இந்நாடு அநபாயச் சோழரது இனிய ஆட்சியிற் குளிர்ந்து வாழ்ந்தது.

### கற்பனை

விளைந்த நெற்கதிர்களைப் பார்த்த ஆசிரியர் அவற்றை அன்பு நிறைந்த சிவனடியாராகக் கண்டது போல உலகத்தில் எங்கும் சிவமயமாகப் பார்த்தறியும்படி நம் மனத்தைப் பழக்க வேண்டும் என்பது முன்னர்க் குறிக்கப்பெற்றது, குடிகள்

தங்கட்கு கிடைக்கும் விளைவில். முதலில் அரசர் கடன் கொடுத்துப் பின் அவ்விடத்தே களவேள்வி முதலிய தருமங்கள் செய்து. மீந்ததை ஐந்து பாங்காக்கி, அதில் ஒரு பங்கு மட்டும் தம் அனுபவத்துக்கு எடுத்துக்கொள்ளத் தக்கவர் — என்ற தரும நூல் விதி உணர்ந்து பின்பற்றத்தக்கது. இவ்வாறு மக்கள் ஒழுகினல் இக்காலத்துக் கேட்கப்படும் பலவிதமான பொருளாதாரச் சங்கடங்களும் தலையெடுக்கமாட்டா. விழாக் களும் — சிவயாகங்களும் — மரபுகளும் — ஒழுக்கங்களும் — மனையறவாழ்க்கை மகிழ்ச்சிகளும் விதிப்படி மல்கி நிலவுதல் நாட்டுக்கு நலம் செய்வன. இவற்றைக் கைவிட்டுத் திரு வள்ளுவரையும் சேக்கிழாரையும் மறந்துவிட்டமையே சோழர் காவிரி நாட்டின் இக்காலக்கொடுமைகளுக்குக் காரணமாம் என்பது அறிந்தோர் கருத்து. **திருவைந்தெழுத்தை முறை யாகப் பயின்று ஒதுவதினல், பிணியின்றி மக்கள் வாழ்வு பெறுவர் என்பதையும் இந்நாள் மக்கள் கண்டு ஒழுகுதல் வேண்டும்.** இப்பகுதியிற் கண்ட சிறப்பும் செழிப்பும், மகிழ்ச்சியும் ஆசிரியர் காலத்து உண்மையாய்க் கண்டவை. இவை ஒரு சிறிதும் புனைந்துரையல்ல. அந்நிலைமாறி இவை தமிழ்ப்புலவர் சித்தரித்துக்காட்டும் புனைந்துரையோ என்று சந்தேகிக்கும்படி இந்நாள் மக்கள் தரித்திரம் — கல்வியில் லாமை — தீயொழுக்கம் முதலியவைகளால் துன்பமேபட்டு அழியும் நிலைக்குக் காரணங்களை இப்புராணத்தின் துணை கொண்டு ஆராய்ந்து தெளிந்து ஒழுகினல் நலமடைவோம். அரசாங்க விவசாயப்பண்ணையார் இதில் குறித்த உழவுத் தொழில் உண்மைகளை ஆராய்ந்து நலம் பெறத்தகுவர்.

*திருநாட்டுச்சிறப்பு முற்றிற்று.*

## திருநகரச் சிறப்பு.

**சுருக்கம்**

சோழநாட்டுப் பலதலங்களினுந் — திருவாரூர் மிகப் பழமையான சிறந்த நகரம். அதில் பல மாடமாளிகைகள் உண்டு. அவற்றில் ஒன்று பரவையார் திருவவதாரஞ் செய்த

மாளிகை அதன் திருவீதி இறைவன் ஒருகால், இருகால் தூது நடந்து சென்ற சிறப்புடையது. மிக மகிழ்ச்சியுடன் மக்கள் வாழும் இடங்களும் வரிசையாய் அமைவன.

இந்நகரை ஒரு காலத்தில் மநுச்சோழர் அரசு புரிந்தனர் அவர் எல்லா உயிர்களையும் தமது கண்ணையும் உயிரையும் போலக் காத்தலையே கருத்தாகக்கொண்டு அரசாண்டு வந்தார். கோயில்களுக்கு ஒழுங்காய்ப் பூசை நியமித்து நீதியரசு செய்து வந்தனர். அவர் ஆட்சியில் குடிகள் அறங்களின் வழி ஒழுகிப் பொருள் இன்பங்களிலும் சிறந்து மகிழ்ந்து வந்தனர். அவ்வரசனுக்கு ஒரே மகன். அவன் அறிவிலும் கல்வி ஒழுக்கங்களிலும்சிறந்து இளவரசுப்பருவம் அடைந்தான். அவன் ஒருநாள் சேனை சூழத் தேர் மேலேறி அரசுலாந் தெருவில் உலாப்போந்தான். ஓர் இளைய பசுங்கன்று துள்ளிப் புகுந்து அவனது தேர்க்காலிலுட்பட்டு இறந்தது. தாய்ப்பசு மிகவும் வருந்தி அரசன் அரண்மனையின் ஆராய்ச்சிமணியை அடித்தது. அரசன் கண்டு வருந்தினன். மந்திரிகள் இதற்காகப் பசுவதை செய்தார்க்குத் தர்மநூல் வழியே செய்யும் பிராயச்சித்தம் செய்யவேண்டும் என்றூர்கள். அரசன் அதற்கிசையாது "பசுவின் துன்பத்தை நீக்க முடியாத நான் அதன் துன்பத்தையே தாங்கிப் பங்கிட்டுக் கொள்வேன்" என்று துணிந்து தீர்மானித்து மகனை அவ்வீதியிலே கிடத்தி அவன் மார்பிலே தனது தேரை ஊர்ந்துவிட்டான் உடனே இறைவன் வெளிப்பட்டு அரசனுக்கு காட்சிகொடுத்து அருள் செய்தார். இறந்த பசுங்கன்று, அரசகுமாரனும். அவனுக்காக முன்னமே தன் உயிர்விட்ட மந்திரியும் உயிர்பெற்று எழுந்தார்கள். எங்கும் பெருமகிழ்ச்சி பொங்கியது. இவ்வாறு இறைவன் நீதிமுறையிலே அருள்செய்து நிற்கும் அநேகம் பெருமைகளை உடையது திருவாரூர். இறைவன் நிலைத்து எழுந்தருளியிருக்கும் பூங்கோயில் திருவாரூர்த் திருநகரத்தின் நடுவிற் சிறந்து விளங்கும்.

## கற்பனே

இப்பகுதியிற் கூறிய மனுச்சோழர் மகனைத் தேர்க்காலில் ஊர்ந்து நீதிமுறை செய்த சரிதம் இங்குக் கல்வெட்டிற் காணப் படுவதுமன்றி அதைக்காட்டும் கல்தேரும் — பசுவும் — கன்றும் மணியும் பிறவும் கோயிலுக்கு வடகிழக்கில் தனியாய் அமைந் துள்ளன. அவை இப்போது பார்ப்பாரும் கேட்பாருமற்றுக் கிலமாகிப் பாழடைந்தநிலையிலிருப்பதே நீதி நினைவானது நம்முள்ளே ஒடுங்கி மறைந்துபோய் விட்டதென்று காட்டு வதற்குச் சாட்சியாம். வேறு ஒரு நாட்டில் இவ்வித நிகழ்ச்சி நடந்திருந்தால் அந்நாட்டவர்கள் அந்த அடையாளங்களைப் **பொன்வேலியிட்டுப் போற்றுவர்.** பசுவின் கன்றுக்குத் தன் மகனை ஈடாக்கித் தம் உயிர் போலவே உயர்வு தாழ்வின்றி மன்னுயிர் அனைத்தையும் மனுச்சோழர் காத்தமை எந்த நாட்டு எந்த மன்னரும் எந்த நாளும் படியெடுத்து எழுதற் பாலவாம், "என் மகன் செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயவிசைந்தேன், அன்னியனோர் உயிர்கொன்றால் அவனைக் கொல் வேணுல்" என்பது மிக உயர்ந்த குறிக்கோளை உலகுக்குக் காட்டி மலைமேல் விளக்குப்போல் நிற்கின்றது. இதனை எல்லா அரசாங்கத்தாரும், அதிகாரிகளும், மக்களும் கைக்கொண்டொழுகினல் நீதித்தவறு என்பது என்றும் எப் போதும் நிகழவே நிகழாது. மனிதர்க்குள்ளும் வருண—நிற— பேதங்களால் நியாய பேதங்கற்பிக்கும் இந்நாள் மக்கள் இதனை ஊன்றி நோக்குவார்களாக.

2. அன்றியும் தம் அவசர நிமித்தமோ உல்லாச நிமித்தமோ வேகமான இயந்திர வாகனங்களைத் துரத்தி மக்கள் முதலிய ஆயிரக்கணக்கான உயிர்களைத் தினமும் ஒரு சிறிது எண்ணமுமின்றிக் கொன்று ஒரு கவலையுமின்றி வாழ்ந்துவரும் இந்நாள் மக்களும் இதனைச் சிந்திப்பார் களாயின் உலகிலே கொடுமையும் பாதகமும் நீங்கும்.

3. தம் பரிசனங்களால் விளையும் துன்பங்களைப் போக்குதல் அரசர்களுக்கும் ஏனையோர்களுக்கும் மிகத்தகுதி

யான கடமையாம். எனவே தமது பரிசனங்கள் செய்ததே சரியென்று தாங்குதல் அரசர்க்கும் பிறர்க்கும் நீதியன்று என்பதும் சிந்தித்துக் கடைபிடிக்கற்பாலது.

4. இங்கு மனு அரசன் செலுத்திய நீதியை இந்நாளில் தற்செயலாய் நேரிட்ட மரணம் என்றும் சாமானிய ஒரு மிருக உயிருக்காக இவ்வாறு செய்தது பித்துப்பிடித்த செயல் என்றும் பலவாறு கூறி எள்ளி நகையாடி ஒதுக்குவர் அறியார். அந்தோ! உயர்ந்த ஞானமாகிய இந்தக் குறிக்கோளை உணர மாட்டாது தமது அறியாமைக்கு மகிழ்ந்துகிடக்கும் இவர்களது அறியாமையின் வலிமை இரங்கற்பாலதேயாம்.

5. செங்கோன்மைச் சிறப்பு என்ற தலைப்பின்கீழ் ஆறுமுகநாவலர் அவர்கள் பதிப்பிற் சூசனத்திற் கண்ட பொருள்களையும் தொகுத்துக் காட்டியுள்ள அரும்பெரும் பிரமாணங்களையும் கண்டு தெளிதல் இவ்வுலக நிலையிலேயும் பெரும் பயன் தரும்.

திருவாரூர்த் திருநகரச் சிறப்பு முற்றும்

---

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்

— சேக்கிழார்

எடுக்கு மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை யைந்துடைத் தாழ்சடை நீண்முடிக்
கடக் களிற்யைக கருத்துள் இருந்துவாம்

— சேக்கிழார்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தடுத்தாட்கொண்ட புராணம்

## திருத்தொண்டர் புராண சாரம்

1. தண்கயிலை யதுநீங்கி நாவலூர் வாழ்
சைவனார் சடையனார் தனைய னாராய்
மண்புகழ வருட்டுறையா னோலை காட்டி
மணம் விலக்க, வன்றொண்டா, யதினக சேர்ந்து
நண்பினுட னருள் புரிய, வாரூர் மேவி
நலங்கிளரும் பரவைதோ ணயந்து வைகித்,
திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந்
திருத்தொண்டத் தொகை யருளாற் செப்பினாரே

2. செப்பலருங் குண்டையூர் நெல்லழைத்துத்
திருப்புகலூர்ச் செங்கல் செழும் பொன்னாச்செய்து
தப்பின் முது குன்றர்தரும் பொருளாற்றிட்டுத்,
தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன்
ஒப்பில் தனித் தூதுவந் தாறூடு கிறியுறுமுதலை
சிறுமதலை யுமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி யருளாற்சேர
வேந்தருடன் வடகயிலை மேவினாரே

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# தடுத்தாட்கொண்ட புராணம்

திருக்கயிலையிலிருந்து ஆலாலசுந்தரர் தென்றிசையிற் போந்து அவதரிக்கும் பேறுபெற்றது திருமுனைப்பாடி நாடு இவர் அவதரித்த ஊர் திருநாவலூர். அப்பகுதியிலே ஆதி சைவ மரபிலே சடையனார் என்ற பெரியாருக்கும் அவரது கற்புடை மனைவியாராகிய இசைஞானிப் பிராட்டியாருக்கும் திருமகனாராய் தீதகன்று உலகம் உய்யும் பொருட்டு இவர் அவதாரமாயினார். நம்பியாரூரர் என்ற பிள்ளைத் திருநாமம் சூட்டப்பெற்றுப் பல அணிகலன்கள் சாத்தித் தெருவிலே சிறு தேர் உருட்டி விளையாடி வரும் ஒருநாள் இவரை அந்நாட்டு அரசர் நரசிங்க முனையரையர் கண்டனர். இவரது பொலிவு அவர் மனதைக் கவர்ந்தது. பெற்றோர்களிடம் கேட்டுப்பெற்று இவரைத் தமது காதன் மகனாகக்கொண்டு வளர்ப்பாராயினர். இவருக்கு மணப்பருவம் வந்தது. பெற்றோர்கள் தங்கள் மரபுக்கேற்பப் புத்தூர்ச் சடங்கவி சிவாச்சாரியாரது மகளாரை மணம் பேசிக் கலியாணம் நிகழ்த்த மணப்பந்தரில் யாவரும் கூடினார்கள். ''மையன் மானுடமாய் மயங்கும் போது தடுத்தாட்கொள்வோம்'' என்று தாம் அருளிய மொழியின் படியே இவரைத் தடுத்தாட்கொள்வதற்காக இறைவன் ஒரு கிழ வேதியர் உருவங்கொண்டு மணப்பந்தரில் வந்து ''இந்நாவலூர் ஆரூரன் என் அடியான் என் வழக்கை முடித்துப் பின்னரே மணஞ்செய்தல் வேண்டும்'' என வழக்கிட்டு அதற்கு ஆதரவாக இவரது தந்தை தன் தந்தை தந்த ஆளோலை உண்டு என்று மேலிட்டனர், வழக்கு மேலிடவே நம்பிகள் அவரைப் பித்தனோ என்றுகூறி வெகுண்டு, அவரைத் தொடர்ந்து பற்றி, அவர் கையிலிருந்த ஓலையை கீறியிட அவர் ஓலமிட்டனர், இவ்வழக்கினைத் தீர்ப்பதற்கு

அனைவரும் திரண்டு திருவெண்ணெய் நல்லூர் நீதிமன்றத்திற்குச் செல்ல, அங்குக் கிழவேதியர் தம் வழக்கையும் முன் நிகழ்ச்சியையும் சொல்லி முறையிட்டனர். ஆரூர் நம்பிகள் "நான் ஆதிசைவன் இவ்வந்தணன் அடிமை என்ற வழக்கு மனத்தினாலுணர்தற்கெட்டா மாயையாயிருக்கிறது என்றனர். நீதிமன்றத்தவர் முறைப்படி இவ்வழக்கை ஆய்ந்தனர். "முன் கிழிபட்ட ஓலைபடி ஓலை, மூல ஓலை வேறாக உண்டு' என்று கிழ வேதியர் சொல்லி மூல ஓலை காட்டினார். அதனை விதிப்படி ஆராய்ந்து "அது நம்பியாரது பேரனார் (பாட்டன்) தந்தது தான்! நம்பி வேதியருக்கு ஆட்செய்ய வேண்டுவதே முறை, என்று விதித்தனர். அவ்வாறு ஆட் செய்வதற்குத் தமது நீடு வாழ்க்கை காட்டுவதற்காக வேதியர் அனைவரும் பின்றொடரச் சென்று திருவெண்ணை நல்லூர் ஆலயமாகிய திருவருட்டுறையிலே புகுந்து மறைந்தனர். நம்பிகள் திகைத்து நின்று அழைத்தனர். மறைந்த வேதியர் இடபவாகனத்திலே உமாதேவியருடன் ஆகாயத்திலே தோன்றி நம்பிகளை நோக்கி "முன்பு நீ நமக்குத் தொண்டன் நம் ஏவலால் மண்ணிற் பிறந்தனை, மண்ணின் வாழ்க்கைத் துன்பம் உன்னை தொடராதபடி வந்து நாமே தடுத்தாட் கொண்டோம்'' என்று அருளிச் செய்து "நம்மை வன்மை பேசியபடியால் உனக்கு 'வன்றொண்டன்' என்னும் நமாம் தந்தோம்'' நம்மை இவவுலகிலே பாடுவாயாக என்று ஆணையிட்டனர். நம்பிகள் யாதினை அறிந்து என்ன என்று சொல்லிப்பாடுவேன்? என்று கேட்க, " நீ முன்பு நம்மைச் சொல்லியபடி என் பெயர் பித்தன் என்றே பாடுவாய்'' என்றருளினர். அவ்வாறே "பித்தா பிறை சூடி, என்று தொடரும் திருப்பதிகத்தை நம்பிகள் பாடியருளினர். இதுபோலவே இவ்வுலகில் பலவாற்றாலும் நமது புகழைப் பாடுவாயாக'' என்று இறைவன் அருளினார். இங்கிது நிற்க அங்கு மணப்பந்தலில் மணமகளாயமர்ந்து மணந்தவிர்ந்த சடங்கவி மகளாரும் திருநாவலூர் நம்பிகளை ஒழியாது உணர்ந்து நின்ற வழியினாலே சிவலோகத்தை எளிதில் அடைந்தார்.

நம்பிகள் அதன்பின் திருநாவலூர் சென்று வணங்கித் திருப்பதிகம் பாடினர். திருத்துறையூர் சென்று வணங்கி

தமக்கு தவநெறி தரவேண்டுமென்று இறைவனை வேண்டிப் பதிகம்பாடி அவ்வாறே அருளப் பெற்றனர். அங்கிருந்து திருத்தில்லையிலே ஆனந்தக் கூத்தரது திருக் கூத்தை வணங்கும் ஆசையினாலே வழிக்கொண்டனர். மாலைக் காலம்வரத் திருவதிகைப் புறம்பணையை அடைந்த இவர் "இத்திருத்தலமானது திருநாவுக்கரசு சுவாமிகள் கைத்திருத் தொண்டு செய்ததலம் ஆதலின் இதனை மிதிக்க அஞ்சுகின்றேன் என்று உட்கொண்டு அந்நகருட்புகுதாது புறத்திலே உள்ள சித்த வடமடத்திலே பரிசனங்களுடன் பள்ளியமர்ந்தருளினர். இரவிலே இறைவர் ஒருவருமறியாமல் உள்ளே புகுந்து, தாமும் பள்ளிகொண்டு நம்பிகளது திருமுடி மேல் ஒருமுறைக் கிருமுறைக் காலை நீட்டினார். இவர் சினந்து "நீ யார்?" என்று வினவினார், அவர் 'என்னை அறியாயோ? என்று சொல்லி மறையவே, "தம்மானை அறியாத சாதியாருளரே" என்ற பதிகத்தைப் பாடித் துதித்தனர், அங்கியிருந்து கெடில நதி கடந்து திருமாணிகுழி, திருத்தினைநகர் என்ற தலங்களை வணங்கிக் கொண்டு திருத்தில்லையை அடைந்து நடேசப் பெருமானை வணங்கிப்பதிகம் பாடிப் பணிந்தனர். அப்போது " திருவாரூரில் நம்மிடம் வருக' என்றொரு வாக்கு ஆகாயத்தினின்றும் எழுந்ததைக் கேட்டனர். அதன்படியே புறப்பட்டுக் கொள்ளிடத் திருநதி கடந்துபோய்ச் சீர்காழியையடைந்தனர். அது ஆளுடைய பிள்ளையார் அவதரித்த தலமாதலின் அதன் உள்ளும் மிதிக்கலாகாது என்று புறத்தே நின்று வணங்கினர். பெருமான் இவருக்கு அங்கே காட்சி கொடுத்தருளப் பெற்றுக் "கழுமல வளநகர் கண்டுகொண்டேனே" என்ற மகுடத்தையுடைய திருப்பதிகம் பாடித் துதித்தனர்! பின்பு திருக்கோலக்கா, திருப்புன்கூர், முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு காவிரிக் கரையை அணைந்து நீராடிச் சென்று அதன் கரை மருங்கே உள்ள திரு அம்பர் மாகாளம், திருப்புகலூர் முதலிய தலங்களை வண்ங்கிக் கொண்டு திருவாரூரை அடைந்தார். முன்னரே தியாகேசர் அவ்வூரின் அடியவர்கட்கு "நம்ஆரூரன் நாம் அழைக்க இங்கு வருகிறான் அவனை மகிழ்ந்து எதிர் கொள்வீர்" என்றருளியபடியே மிகச் சிறப்புடன் அடியார்கள்

நம்பிகளை எதிர் கொண்டனர். அவர்களை நோக்கி 'உங்கள் பெருமான் எம்மையும் ஆள்வரோ'' எறுன் 'பதிகம் பாடி வணங்கிப் போய்த் திருமூலட்டான நாதரையும், தியாகேசரை யும் தரிசித்துப் பதிகம் பாடினார். அப்போது ''நம்மை உனக்குத் தோழமையாகத் தந்தோம் நீ மணக்கோலத்துடன் மண்மேல் விளையாடிவருவாயாக'' என்று ஓர் அசரீரி வாக்குக் கேட்க, நம்பிகள் பணிந்துகொண்டு அன்று முதல் அவ்வாறே மணக்கோலத்துடன் திருவாரூரை நாள்தோறும் தரிசித்து வந்தார். அன்று முதல்இவருக்குத் 'தம்பிரான்றோழர்' என்று பெயர் வழங்கியது.

இதற்கு முன்னரே திருக்கயிலையினின்றும், ஆணையின் வழியே. பூவுலகிற் போந்த சேடியர் இருவரிற், கமலினியார் இங்குத் திருவாரூரில் உருத்திரகணிகையர் மரபில் அவதரித்து பரவையார் என்ற நாமம் பூண்டு சிறப்புடன் வளர்ந்து தினந் தோறும் திருவாரூர்ப்பெருமானைத் தரிசித்து வருவாராயினர். அவ்வாறு நிகழும் நாள்களில் ஒருநாள் நம்பிகள் தரிசித்துக் கோயிலினின்றுவரும்போது. தரிசிக்கச் சென்று கொண்டிருந்த பரவையாரைக் கண்டனர், அவரும் இவரைக் காணவே. முன் தொடர்பினுலே இருவர் மனத்திலும் ஒருவர்மேல் ஒருவர் காதல் நிகழ்ந்தது, திருவாரூர்ப் பெருமானது திருவருளினாலே அவ்வூர் அடியவர்கள் இருவருக்கும் திருமணம் நிகழ்வித்தனர். நம்பிகள் மகிழ்ந்து விளையாடியும் திருவாரூரைத் தரிசித்தும் வருவாராயினர். ஒருநாள் அவ்வாறு திருக்கோயிலுக்குச் செல்பவர் ''தேவாசிரியனில் வீற்றிருக்கும் அடியார்களுக்கு நான் அடியேனாகப் பண்ணும் நாள் எந்நாள்?'' என்று இறைவனை வணங்கினார், இறைவன் எதிர்காட்சி கொடுத்து அடியார்களைப் பாடும்படி பணித்து அவர்களது பெருமைகளை எடுத்துச் சொல்லி அவர்களது வழித்தொண்டின் வரலாறு களையும் தன்மைகளையும் உணர்த்தி, அவர்களைப் பாடு வதற்காகத் ''தில்லைவாழந்தணர்கள் அடியார்க்கு மடியேன்'' என்று அடியெடுத்துக் கொடுத்தருளினார், அவ்வாறே தொடங்கி நம்பிகள் திருத்தொண்டத்தொகை என்ற திருப் பதிகத்தை உலகமுய்யப் பாடி, அடியார்களை வணங்கி அவர் கள்மகிழுமாறு அவர்கள் நடுவுள் அணைந்து வீற்றிருந்தனர்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சுந்தரமூர்த்தி நாயனுர் புராணம்

## கற்பனை

1. ஒவவோர் உயிரும் தான் பிறவி எடுக்க நேர்ந்த கருமங்களையே அனுபவித்துக் கழித்தல் வேண்டும் என்றும் மேலும் மேலும் வினைகள் வந்து சேரும்படி மனம் செல்லும் போது தடுத்து ஆட்கொள்ள வேண்டும் என்றும் இறைவனை வணங்கி வரம் பெறுதல் வேண்டும். இதுவே இப் பகுதியிற் சிறந்த கற்பனையாகும்.

2. குழந்தைகளுக்கு தாந்தாம் வழிபடு கடவுளரின் பெயரை வைத்து வழங்குதல் சிறந்த பயன்தரும். நம்பிகள் திருவாரூர் திருமூலத்தான நாதரின் அடிப்பேர் வைத்தழைக்கப்பெற்ற அதனுல் யாவரும் பெற்ற பேறு காண்க.

3. மன்னவர் திருவில் வளர்ந்த காலத்தும் குலவொழுக்கத்தினை விடாமற் பாதுகாத்துக் கொண்டனர் நம்பிகள் என்பது இந்நாள் மாக்கள் உணர்ந்து பின்பற்றத்தக்க சிறந்த கற்பனை. காரணமின்றியும், அற்ப காரணங்கொண்டும், தத்தம் குலவொழுக்கங்களைக் கைவிட்டு அலங்கோல வாழ்க்கையிற் றிரிந்து அலைந்து கெடுவது இந்நாளிற் பெரு வழக்காய் விட்டது. நரசிங்கமுனையரையர் காதன் மகனுய் வளர்ந்த நம்பிகள் தமது வைதிக மரபில் வைதிகப் பெருமையை உலகம் உணரக் கடவது.

4. மண முதலியவற்றிலே சடங்குகள் வேண்டியதில்லை என்போர் நம்பிகளது திருமணத்திற் போந்த விதிச்சடங்குகளை அறிந்து பின்பற்றக்கடவர்.

5. உலகிலில்லா வழக்கு மேலிட்டுக் கல்யாணப் பந்தரிற் கலகம் செய்யப் போந்தப் கிழவேதியரிடம் நம்பிகளும் மறையோரும் நீதி சபையோரும் நடந்து கொண்ட வணக்க ஒழுக்கம் உலகம் அறிந்து பின்பற்றற்குரியதாம்.

6. இந்த மாநிலத்திலில்லா வழக்கென்றும் தமது குலத்துக்கு இழிவு தரும் வழக்கென்றும் உணர்ந்தும் திருவெண்ணெநல்லூர் நீதிமன்ற வேதியர் துலைக்கோல் போல் நின்று ஒருபாற்கோடுதலின்றி வழக்கை ஆய்ந்து தீர்த்தது இந்நாள் நீதிமன்ற உலகம் பெரிதும் உணர்ந்து பின்பற்ற தகுந்ததாம்.

7. தடுத்தாட்கொள்ளப்பெற்ற நம்பிகள் பின்னருந் தவநெறி வேண்டிப்பெற்றது உயிர்கள் உணர்ந்து கொள்ளவேண்டிய உண்மை.

8. மணந்தவிர்ந்தபின் சடங்கவியாரது மகளார் நம்பிகளையே உணர்ந்து நின்று, அதன் வழியே சிவலோகமும் பெற்ற பேறு இந்நாட் சீர்திருத்தம் பேசுவோர் உணர்ந்து கொள்ளத் தக்கது. இதுவே உலகம் பின்பற்றி ஒழுகத் தக்க உயர் வழியாம். திலகவதி அம்மையார் சரிதமும் காண்க.

8. திருவதிகையிலும், திருக்கழுமலத்திலும் உள்ளேயும் மிதிக்கலாகாது என்று நம்பிகள் புறத்தே நின்று தொழுது சென்ற உயர்நெறியை உலகம் உணர்ந்து உய்வதாக. திருத்தலங்களுட்சென்று வாழ்வோர் அதனுள்ளே போந்திடினும், அங்கு அநுசிதங்களையேனும் செய்யாது விடுதல் பெரும் புண்ணியமாம். தலங்களில் வாழ்வோர் தாமும், அங்குக் கடவுள் நினைப்பும் பெரியோர் நினைப்பும் இன்றியே நின்று வருதல் பெரும் பாவமுமாம்.

10. இறைவனது திருநடங்கும்பிடப்பெற்று மண்ணில் வந்த பிறவியே இன்பம், அவ்வாறு பெறுத பிறவிகள் மேன் மேலும் துன்பத்துக்கே ஏதுவாவன, பேசாத நாளெல்லாம் பிறவாத நாள் என்பது நம்பிகள் திருத்தில்லை தரிசனத்திற் கண்டபேறு.

11. பண்டை விதி கடை கூட்ட நிகழ்வனவாம், மணம் முதலிய உலகானுபவங்கள் கமநக் கழிவுக்கும், இறுதியில் வீட்டுக்கும் காரணமுமாம், அவ்வாறின்றி ஏனைப்புலன் வழியே சென்று நிகழ்வனவாகிய கருமங்கள் பிறவிக்குக் காரணமாம் உலகானுபவங்களை இறைவனருள் வழியே நின்று அனுபவித்தலே முறை.

12. அடியார் சிறப்பும் வணக்கமும் மனிதப்பிறவிக்குப் பேறு தருவன என்பது இப்பகுதியின் மட்டுமன்றி, இப்புராண முழுமையிலும் போந்த சிறந்த தனிக் கற்பனையாம். அரனிலும் அடுத்த துணையாவார் அடியவர்களேயாம்.

சுந்தரமூர்த்தி நாயனர் புராணம் முற்றும்,

---

ஆதியாய் நடுவுமாகி அளவிலா அளவுமாகிச்
சோதியாய் உணர்வுமாகித் தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகமாகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி
— சேக்கிழார்.

கற்பனை கடந்தசோதி கருணையே யுருவமாகி
அற்புதக்கோல நீடியருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற் பர வியோமமாகுந் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ் செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி

தண்ணளி வெண்குடை வேந்தன் செயல் கண்டு [தரியாது
மண்ணவர் கண் மழை பொழிந்தார் வானவர் பூமழை பொழிந்தார்
அண்ணலவன் கண்ணெதிரே யணிவீதி மழவிடை மேல்
விண்ணவர்கள் தொழ நின்ருன் வீதிவிடங்கப் பெருமான்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 2, தில்லைவாழந்தணர் சருக்கம்

## தில்லைவாழந்தணர் புராணம்

### தொகை

" தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன் "

### வகை

"செப்பத் தகுபுகழ்த் தில்லைப் பதியிற் செழு மறையோர்
ஒப்பப் புவனங்கண் மூன்றினு மும்பரி னூரெரித்த
அப்பர்க் கமுதத் திருநடர்க் கந்திப் பிறையணிந்த
துப்பர்க் குரிமைத் தொழில்புரி வோர்தமைச்
சொல்லுதுமே "

### புராண சாரம்

நல்ல வானவர் போற்றும் தில்லைமன்றுள்
நாடகஞ்செய் பெருமானுக்கு அணியார் நற்பொன்
தொல்லை வான்மணி யெடுத்தற்கு உரியார் வீடும்
துறந்த நெறியார் தொண்டத் தொகை முன்பாடத்
'தில்லை வாழந்தணர்' என்று எடுத்து நாதன் செப்பும்
அருளுடையயர் முத்தீயார் பத்திக்கு
எல்லை காண்பரியார் ஒப்புஉலகில் தாமே
ஏய்ந்துளார் எமையாள வாய்ந்துளாரே.

———

# தில்லைவாழந்தணர்

## சரிதம்

உலகெலாம் நிறைந்தும், அறிவித்தும், நிற்கும் ஐந் தொழில் நடனம் போற்றப்பெறுவது. அந்நடனஞ் செய் கின்ற பூங்கழல்போற்றப்பெறுவது. இதனைப் போற்றி வாழ் கின்றவர்களாகிய தில்லைவாழந்தணர்கள் இறைவனது திரு வடித் தொண்டிலே உரிமை பூண்டு ஒழுகுகின்றவர்கள். இறைவனது திருமேனியை அலங்கரிப்பவர்கள், மறைகளாற்று திப்பவர்கள். இன்னும் திருக்கோயிலினுள்ளே செய்யப் பெறும் அகம்படித்தொண்டுகள் செய்பவர்கள். உலகம் அருள் பெற்றோங்குமாறு மூன்றெரியும் விதிப்படி வளர்த்து வருபவர். நான்கு வேதமும் ஆறங்கமும் வல்லவர். தூய மரபில் வந்த தூய ஒழுக்கமுடையவர். அறுதொழிலாற் கலியைவாராமே நீக்கியவர். திருநீற்றின் செல்வமே பற்றுகோடென்றும், சிவ பெருமானிடத்துப் பதிந்த அன்பே பெரும்பேறு என்றும் கொண்டொழுகுபவர். ஞானம் முதலாகிய நான்கும் உணர்ந் தவர். தானத்திலும் தவத்திலும் வல்லவர்கள். மானமும் பொறுமையும் தாங்கிய இல்லறத்தில் நிற்பவர். இம்மை யிலேயே இறைவனைக் கிடைக்கப்பெற்றவர். தமக்கு ஒப்பில் லாதவர்கள், திருத்தொண்டத்தொகையின் முதலில் வைத்து திருவாரூர்ப்பெருமான் திருவாக்கினால் சொல்லப் பெற்ற பெருமையை உடையவர்கள். இவர்கள் என்றும் பொதுநடம் போற்றி வாழ்வாராக.

## கற்பனை

1. இறைவனது ஐந்தொழிற் திருக்கூத்தினை சகள நிட்கள வழிபாடுகளால் திருத்தில்லையம்பலத்திற் கண்டு வழிபடுதல் சிறப்புத்தருவதாகும்.

2. அடித்தவம், அகம்படித்தொண்டு, ஆளாந்திரு, இவற்றின் சிறப்பியல்புகள் உணர்ந்து போற்றத்தக்கன.

3. மானமும் பொறையுந் தாங்கிய மனையறமே சிறந்தது.

4. நான்மறை ஆறங்கம் பயின்றுவருதலும், மரபுக்கு மறு வாராமற் காத்தலும் நல்லொழுக்கத்து நிற்றலும். ஞான முதலிய நான்கும் தெரிதலும், தானமுந்தவமும் சார்தலும்; தருமமே பொருளாக்கொள்ளுதலும், அந்தணர்க்குப் பொது மையாலும் தில்லைவாழந்தணர்க்குச் சிறப்பாயும் உரியன.

5. உயிர்கள் உறுவது திருநீற்றின் செல்வம். பெறுவது சிவன்பால் அன்பாம் பேறு.

6. இம்மையே முதல்வரைப் போற்றப்பெற்று வாழ் வார்கள் இனிப் பெறத்தக்க வேறு பேறில்லையாம்.

7. பிறர் எண்ணுகின்றபடி வேத விதியாகிய வைதிக ஒழுக்கமட்டுமல்லாமல் அதனின் மேற்பட்ட ஆகம விதியாகிய சைவ சித்தாந்தத் திருநீற்றின் நெறியும் அடித்தவமும் சிவ ஞானமும் தில்லைவாழந்தணர்க்குரியன.

---

அண்ணலே யெனை ஆண்டுகொண்டருளிய அமுதே
விண்ணிலே மறைந்தருள் புரிவேத நாயகனே
கண்ணினல் திருக்கயிலையில் இருந்த நின்கோல
நண்ணி நான்தொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார்.

சடைமருங்கில் இளம்பிறையுந் தனிவிழிக்குந் திருநுதலும்
இடமருங்கில் உமையாளும் எம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையுமுன் கண்டரசன்
போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல் வேந்தற்கருள்
கொடுத்தான்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 2. தில்லைவாழந்தணர் சருக்கம்

# 2. திருநீலகண்டநாயனர் புராணம்

## தொகை

'திருநீலகண்டத்துக் குயவனுர்க்கு அடியேன்'

## வகை

''சொல்லச் சிவன்றிரு வாணைகள் றூமொழி தோணசையை
யொல்லைத் துறந்துரு மூத்ததற் பின்னுமை கோனருளால்
வில்லைப்புரை நுதலாளொடு இளமைபெற்றின்பம் மிக்கான்
தில்லைத் திருநீலகண்டக் குயவனுஞ் செய்தவனே''

## புராண சாரம்

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்த ராகித்
'தீண்டில் எமைத்திரு நீலகண்டம்' என்று
சொல்லு மனையாள் தனையே அன்றி மற்றும்
துடியிடையா ரிடையின்பம் துறந்து மூத்துஅங்கு
எல்லையில்ஒரு இறைவைத்து மாற்றி நாங்கள்
எடுத்திலம் என்று இயம்புமென இழிந்து பொய்கை
மெல்லியலா ளுடன்மூழ்கி இளமை எய்தி
விளங்குபுலிச் சரத்தரனை மேவினரே.

---

## சரிதச்சுருக்கம்

சிதம்பரத்தலத்திலே குயவர் குலத்தில் அவதரித்தவர் ஒரு பெரியார். இவர் நடராஜப்பெருமானை நியதியாக வழி படுதலைக் கைக்கொண்டவர். பொய்மை ஒழித்த அறவழியிலே வாழ்கின்றவர். சிவனடியார்களுக்கான எந்தப் பணிவிடையும் செய்யும் விருப்பிலே நின்றவர். சைவத்தின் உண்மைச் சார்பே மக்கள் அடையும் பொருளாவது என்று சார்ந்து ஒழுகும் தன்மையுடையவர். வழிவழி வரும் தமது குலத் தொழிலை விடாது செய்து வருவாராய், மட்கலங்களைச் செய்யுந்தொழிலைத் தமது சீவனத்துக்காகும் அளவில் ஆக்கிக் கொண்டு, விரும்பிய சிவனடியார்க்கெல்லாம் பிச்சைப் பாத்திரமாகிய திருவோடுகளைக் கொடுத்து வந்தார். இவ்வாறொழுகிவரும் நாளிலே மிகுந்த இளமைப்பருவம் காரணமாகச் சிற்றின்பத்துறையிலே தம்மை எளியராக ஆக்கிக் கொண்டு ஒழுகுவாராயினர். அவர் மனைவியார் கற்பிலும், அழகிலும் சிறந்தவர். இப்பெரியார் சிவபெருமானது திருநீல கண்டத்தினிலே மிகுந்த பக்திசெய்து அதனையே எப்போதும் துதித்துச் சொல்லிவருபவர்.

ஒருநாள் இவர் ஒரு பரத்தையினிடமணைந்து நண்ணினர். அதனால் மனைவியார் மானம் பொருது ஊடல் கொண்டவராகி, இல்வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாம் செய்தேயும் இவரோடு உடனுறைவதற்கு மட்டும் இசையாத வராயினர். அவரைப் புலவிதீர்த்துக் கூடும் பொருட்டு இவர் வேண்டியவற்றைச் சொல்லி அவரை அணையத் துணிந்த போது, "அவர் எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்" என்று ஆணையிட்டனர்.

அது கேட்ட பெரியார் உடனே பெயர்ந்து நீங்கி அயலார் போல அவரைப் பார்த்து "எம்மை என்று சொன்னதனால் உம்மையேயன்றி மற்ற, மாதரார் தம்மையும் என் மனத்தி னாலுந் தீண்டமாட்டேன்" என்று சூளுரைத்தனர். மனைவியார் தம் கணவர்க்கு வேண்டிய இல்வாழ்விற்குரிய ஏனை எல்லாக்

காரியங்களையுஞ் செய்துவர, இவ்விருவரும் திருவாணையைக் காத்து மெய்யுறுபுணர்ச்சி ஒன்று மட்டுமின்றி இந்நிகழ்ச்சியை அயலார் ஒருவரும் அறியாதபடி, ஒரு வீட்டிலே உடன் வாழ்ந்து இல்லறம் நடத்திக்கொண்டு வந்தனர். இவ்வாறு ஆண்டுகள் பலவுங்கழிந்தன. இவர்கள் இளமையுங்கழிந்தது. இருவரும் மூப்படைந்து உடல் தளர்ந்தனர், ஆயினும் இறைவன் அன்பினில் ஒரு சிறிதும் தளர்ந்தாரில்லை. இவர்களது அன்பை உலகமறியச் செய்து உலகுக்கு நன்னெறி காட்டுவதற்காக இறைவன் கீளுங் கோவணமுந் தாங்கி நீறு பூசி வெண்ணூல் பூண்டு, பம்பை மயிர்த்தலை உடையாராகிய ஒரு சிவயோகியாராக உருவெடுத்துக்கொண்டு கையில் ஒரு திருவோட்டினை ஏந்திக்கொண்டு, நடந்து வந்து இவரது திருமனையை நண்ணினர். அவரை இவர் உரிய வகையில் உபசரித்து, "நான் செய்யும் பணிவிடை யாது?" என்ன, அவர் "எனது இந்தத் திருவோடு மிக அரியது. தன்னிடம் வந்த எல்லாவற்றையும் தூயதாக்குவது, இதனை வாங்கி உன்னிடம் வைத்து நம்.வேண்டும்போது தருக" என்று கூறி தம் திருவோட்டினைக் கொடுத்தனர். இவரும் அவ்வண்ணமே அதனை வாங்கிக் காவல் பொருந்திய ஒரு தனியிடத்துச் சேமித்து வைத்து வந்து சிவயோகியாரிடம் விடைபெற்று மீண்டனர்.

இவ்வாறு சிவயோகியார் வந்து நாட்பல கழிந்தன. இறைவன் அத்திருவோட்டினை வைத்த குறியிடத்தினின்று அகலப்போக்கிவிட்டார். பின்பு ஒருநாள் யோகியார் மீண்டு வந்து இவரிடம் தமது திருவோட்டினைத் தரும்படி கேட்டனர். இவர் அதனைத் தேடி காணாது திகைத்தனர். மிகவும் பயந்து சிவயோகியாரிடம் வந்து அவ்வோடு கெட்டுப்போய்விட்டபடியால் அதற்குப் பிரதியாகத் தம்மிடமுள்ள வேறு நல்லதொரு திருவோடு பெற்றுக்கொள்ளும்படி வேண்டினர். யோகியார் சினந்து "நான் வைத்த அடைக்கலப்பொருளைக் களவுசெய்து இவ்வாறு பாவகம் பலவும் செய்கின்றாய். என் ஓட்டினை நீ கெடுத்துவிட்டது உண்மையாயின் உன் மகனைக் கைப்பற்றிக் குளத்தில் மூழ்கி சபதம் செய்க" என்றனர்.

நாயனுர் தமக்கு மகனில்லை என்ன, ஆயின் மனைவியார் கைப் பற்றி மூழ்கித் தருக என்று கேட்டனர் யோகியார். அதற்கு எங்களில் நிகழ்ந்த ஒரு சபதத்தால் நீர் கேட்டவாறு உடன் மூழ்க இசைவில்லை. புனலில் யானே மூழ்கித் தருகின்றேன் வரும் என்று நாயனுர் கூற, யோகியார் மிகச் சினந்து ''தில்லைவாழந்தணர் வந்து கூடிய சபையில் சென்று முறையிட்டனர். அவர்கள் இருவரையும் விசாரித்து யோகியார் கேட்டவாறு மனைவியைப் பற்றி மூழ்கித் தருதலே நீதிவழக்கு என்று தீர்த்தனர். பெருந்தும் வகையினுலே மூழ்கித் தருவதாய்ச் சொல்லி நாயனுர் மனைவியாரை உடன்கொண்டு திருப்புலீச்சரத்து முன்னர் திருக்குளத்தில் இறங்கி மூங்கில் தண்டின் இருதலையும் தானும் மனைவியாருமாகப் பற்றி மூழ்கிப் புக்கனர். யோகியார் மனைவிகைப் பற்றி மூழ்கீர்'' என்று கேட்டனர். அப்போது அவர் தமது பழஞ் செய்கையை உலக மறிய எடுத்துச் சொல்லி மூழ்கிக் கொடுத்தனர்.

இவ்வாறு மூழ்கிக் கரையேறும் போது இருவரும் ஆணை நிகழ்ந்த முன்னை நாளிலிருந்த அந்த இளமைபெற்று விளங்கினர். தேவரும், முனிவர்களும் கற்பகப்பூ மழைபொழிந்தனர். யோகியராக வந்த இறைவன் மறைந்து ஆகாயத்தில் விடையின் மீது உமையம்மையாருடன் அவ்விருவருக்கும் காட்சி தந்தருளினர். இவர்கள் இருவரும் கண்டு போற்றித் தொழுது நிற்க ஐம்புலனும் வென்ற மிக்கீர்களே இவ்விளமையுடன் என்றும் நம்பால் இருப்பீர்களாக என்று அருள்செய்து எழுந்தருளினர். செயற்கரிய செய்கை செய்து சிவலோகத்தைச் சேர்ந்து இவர்கள் என்றும் நீங்கா இளமையுடன் பேரின்ப முற்றுர்கள்.

திருநீலகண்டத்தினிடத்தே பக்திசெய்து அத்திருவாணை போற்றிச் செயற்கருஞ் செய்கை செய்து சிறந்து பேறு பெற்றதனுலே இப்பெரியார் திருநீலகண்டநாயனுர் எனப் பெயர் பெற்றுர்.

## கற்பனை

1. அடியவர் கூட்டத்திற் குலம்பற்றிய பெருமை சிறுமை எண்ணவருவதின்றும் ''நாடவர் நாடறிகின்ற, குல மிலராகக் குலம துண்டாக'' என்றது ஆளுடையபிள்ளையார் தேவாரம்.

2. ஒவ்வொருவரும் அவ்வவர்க்குரிய குலத்தொழிலையும் குலவொழுக்கத்தையும் கைவிடாமல் பின்பற்றி வாழத் தக்கவர்.

3. குலத்தொழில் அல்லது வேறு தொழில் செய்வோர் அதனைத் தன் சீவனத்துக்கும் இல்வாழ்க்கை நிலைக்கும் அவசியமான அளவுக்கே அமைத்துக்கொண்டு ஏனைக் காலத்தையும் முயற்சியையும் சிவபெருமான் பாலிலும், சிவனடியார் பாலிலும் செலுத்தக் கடவர். இந்நாளில் மக்கள் பேராசையுட்பட்டு அலைவதுபோல் மேலும் மேலும் எல்லையின்றித் தொழில் செய்து பொருளீட்டிக் காலங்கழித்துக்கொண்டு அரன் நினைவும் அடியார் நினைவுமின்றி இறந்தொழிவது முறையன்று.

4. பரத்தையர் கேண்மை நூல்களாலே கடியப்பட்ட தீயொழுக்கமாம்.

5. நாயகனது பரத்தையர் கேண்மையான ஒழுக்கம் நாயகிகள் பால் மானம் பொறாத ஊடல் விளைக்கும். இது கற்புக்கிழுக்கன்று.

6. இறைவனது திருநீலகண்டம் யாவராலும் பாராட்டிப் பத்தி செய்தற்குரியது. அது புவனங்களையெல்லாம் அழிவில்லாமலும் கேடுவராமலும் காத்த இறைவனது அருட்செயலை விளக்கி அதனை உலக மறிந்துய்யவைத்த அருள் அடையாளம். ''பழனத்தரசை எழில் இமையோர், படிறுமொழிந்து பருகக் கொடுத்துப் பரவைநஞ்சம்மிடறு தடுத்ததுவும் அடியேங்கள் விதிவசமோ,'' என்ற பதினோராந்திருமுறையும் (சிவபெருமான் திருவந்தாதி 28) காண்க.

7. இறைவன் ஏந்திய திருவோடு மிகப் பெருமை உடையது. அது உலகமுய்ய ஏந்தப் பெறுவதாம். சிவ ஞானிகள் தாங்கும் திருவோடும் அத்தன்மையதேயாம்.

8. காமம் கொடிது, அதன் வழிப்பட்டோருக்கு அது எல்லாத் தீமைகளையும் விளைக்க வல்லது. அது யாவராலும் வெலற்கரியது. இறைவன் சார்பும், அடியவர் சார்பும் பெற்றுத் திருத்தொண்டில் உறைப்புடைய அடியவர்க்கே காமத்தை வெல்லுதல் இயலுமேயன்றித் தேவர்களுக்கும் அரியதாம். விட்டுணு, பிரமன், இந்திரன். சந்திரன் பல முனிவர்கள் முதலியோர் சரிதங்களைக் காணில் இதன் உண்மையும் இந்த நாயனாரது அளவிலா மேன்மையும்விளங்கும், இளமை மிக்க இந்நாயனாரும் மனைவியாரும் ஒரே வீட்டினுள் வாழ்ந்ததும் காமத்தை அறவே துறந்து ஆயுள் முழுவதும் திருவாணை யினையே காத்த அரிய பெருமை உலகம் போற்றத்தக்கது. ''மாது சொன்ன சூளால் இளமைதுறக்கவல்லே னல்லன்'' என்று தவர ஜசிங்கமாகிய பட்டினத்தடிகளும் பாராட்டியது இப்பெருமை.

9. மனைவியிடத்தும் விதிவழியே நின்று மக்கட் பேற்றினைக் குறித்தே ''வரையாநாளின் மகப்பேறு குறித்து'' மெய்யுறு புணர்ச்சி கொள்ளத்தக்கது இறைவன் ஆணை வழி யின் முன்னர், அதுவும் அடிப்படுத்தி ஒதுக்கத்தக்கதாம். ஏனைய எல்லா உலக அனுபவங்களும் இவ்வாறே கொள்ளத் தக்கன. இதுவே மக்கள் அறிந்து விரும்பி கைக்கொண்டு உய்யும் நன்னெறியாம்.

10. ஒழுக்கமும். புகழும், பெருமையும் விரும்பி, மனிதர் சாட்சியாகக் காக்கப்படுவது அன்று. எங்குமுள்ள இறைவனை சாட்சியாக வைத்து உள்ளும் புறமும் எஞ்ஞான்றும் எவவிடத்தும் ஒன்றுபோலவே பாதுகாக்கத்தக்கது,

11. சிற்றின்பம் சிறிது. பேரின்பம் பெரிது, இறைவனிடத்தே பதிந்த அன்புக்காகச் சிற்றின்பத்துறந்தவர் என்று மழியாப்பேரின்பமடைகுவர்.

திருநீலகண்ட நாயனார் புராணம் முற்றிற்று.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 3. இயற்பகை நாயனர் புராணம்

## தொகை

'இல்லையே யென்னாத வியற்பகைக்கும் அடியேன்'

## வகை

"செய்தவர் வேண்டிய தியாதுங் கொடுப்பச் சிவன் தவனாய்க்
கைதவம் பேசி, "நின் காதலியைத் தரு" கென்றலுமே
மைதிகழ் கண்ணியை யீந்தவன் வாய்ந்த பெரும் புகழ் வந்து
எய்திய காவிரிப்பூம் பட்டினத்துள் இயற்பகையே"

## புராண சாரம்

எழிலாரும் காவிரிப்பூம் பட்டினத்துள் இயல்வணிகர்
இயற்பகையார் இருவர் தேட
அழலாய பிரான் தூர்த்த மறையோனாகி ஆயிழையைத்
தரவேண்டி அணைய ஐயன்
கழலாரப் பணிந்து மனைக் கற்பின் மேன்மைக்
காதலியைக் கொடுத்து அமர் செய் கருத்தால் வந்த
பிழையாருஞ் சுற்றமெலாம் துணித்து மீளப்
பிஞ்ஞகனார் அழைத்தருளப் பெற்றுளாரே.

———

# இயற்பகை நாயனுர்

சோழ நாட்டிலே காவிரி கடலோடு கலக்கும் கரையிலே உள்ளது பழமையாகிய புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினம். காவிரியின் நடு பாய்ந்து மிக்க நீர் அங்கு கலப்பதால் கடல் காவேரி சங்கமுகம் என்றதொரு தீர்த்தமாய் என்றும் நிலவும். அந்நகரத்திலே முதல் வணிகர் குலத்திலே இயற்பகையார் என்ற பெயருடைய ஒரு பெரியார் இருந்தார். அவர் சிவனடியார்கள் யாவரேயாயினும் அவர்கள் தம்மிடத்து வேண்டிய பொருள் எதுவேயாயினும் இல்லை யென்னுதே கொடுக்கும் அதனைத் தம் இயல்பாகக் கொண்டு அதுவே தமது குற்றமற்ற ஒப்பற்ற இல்வாழ்க்கையின் பேறு ஆகும் எனக் கொண்டு வாழ்ந்து வந்தனர்.

அந்நாளில் இறைவன் தூயநீறு பூசிய மேனியில் தூர்த்த வேடமும் விளங்கும் ஒரு வேதியாகக் கோலங் கொண்டு, தமது தொண்டனர் இல்லையென்னுது கொடுக்கும் இயல்பினை உலகுக்குக் காட்டி உய்விக்க எண்ணி எழுந்தருளி வந்து இயற்பகையார் வீட்டினுட் புகுந்தார். அவரை இவர் எதிர் கொண்டு, ''தேவரீர் எழுந்தருளியது முந்தை எம் பெருந் தவம்'' என்று முகமன் பல கூறி வரவேற்றனர், மறையோர் இயற்பகையாரை நோக்கி, ''சிவனடியார்கள் குறித்து வேண்டிய பொருளைக் குணமெனவே கொண்டு ஒன்றினையும் இல்லையென்னுது நீ கொடுக்கும் உண்மையைக் கேட்டு உம்மிடத்து ஒரு பொருளை வேண்டி வந்தோம். அதனைக் கொடுக்க இசையலாம் என்ருல் சொல்லலாம்'' என்ருர்.

அது கேட்ட இயற்பகையார் ''எந்தப் பொருளும் என்னிடத்து உள்ளதே யானுல் அது சிவனடியர்கள் உடைமையேயாம். தேவரீர் அருளிச் செய்யலாம்'' என்ருர். வேதியர் ''உன் காதல் மனைவியை வேண்டி வந்தேன்'' என்ருர்.

புறத்திலும் சொல்லத்தகாத இம்மொழியை வேதியர். எதிரே நின்று சொன்னபோதிலும், முன்னையிலும் மகிழ்ந்து,

இயற்பகையார் ''என்னிடம் உள்ள பொருளேயே கேட்டது தேவரீர் எனக்குச் செய்த பேறு'' என்று சொல்லி விரைந்து மனையுட் புகுந்து தம் மனைவியாரைப் பார்த்து, ''விதி மணக்குல மடந்தையே இன்று உன்னை இம்மெய்த்தவர்க்குக் கொடுத்தேன்'' என்றார். மனைவியார் அது கேட்டுக் கலங்கிப் பின் தெளிந்து ''என் உயிர் நாதராகிய நீர் சொல்லிய தெதுவோ அதனைச் செய்வதைத் தவிர வேறு உரிமை எனக்கு உண்டோ'' என்று சொல்லிக் கணவனை வணங்கினார். அவரும் இவரை எதிர் வணங்கினார். அம்மையார் போய் மாதவரைப் பணிந்து அவர் பக்கத்திலே நின்றார். இவ்வாறு கொடுத்து மகிழ்ந்த நாயனர் ''இனி அடியேன் செய்ய வேண்டிய பணிவிடை யாது?'' என்று வேதியரைக் கேட்க அவர் ''நான் இப்பெண்ணைத் தனியாய்க் கொண்டு போகும்பொழுது சுற்றத்தாராலும் ஊரவராலும் இடையூறு நேராதபடி நீ துணை போதுக'' என்றார். ''முன்னர் அறிந்து நானே செய்ய வேண்டிய இப்பணியை தேவரீர் சொல்லும் வரை தாழ்ந்தது பிழை'' என்று சொல்லி உட்சென்று கச்சணிந்து வாளும் பலகையுந் தாங்கி வீரத்துடன் இயற்பகையார் புறப்பட்டு வேதியரையும் முன்னே அம்மையாரையும் போக விட்டு தாம் துணையாகப் பின்னே போந்தனர்.

இது கேட்டு சுற்றத்தாரும் ஊரவரும் ''இவ்வாறு யாவர் செய்தார் இயற்பகை பித்தனேயாம் ஆயின் அது காரணமாகப் பெண்ணை ஒருவன் கொண்டு போவதா என்று பழி வாராமல் காக்கும் பொருட்டு வேல், வாள், சுரிகை முதலிய படைகளை ஏந்திக் கொண்டு மிகவும் ஆர்ப்பரித்துப் பரவி 'அழிதகனே நீ போகாதே நில் எங் குலக்கொடியாகிய பெண்ணை விட்டு நீ போ'' என்று சொல்லி எதிர்த்து வந்தார்கள். வேதியர் அஞ்சினார் போல அம்மையாரைப் பார்த்தார். அம்மையார் ''இறைவனே அஞ்ச வேண்டா; இயற்பகை வெல்லும்' என்றார். இதனை எல்லாம் இயற்பகையார் கேட்டு ''அடியேன் அவர்களையெல்லாம் வீழ்த்துகின்றேன் தளரவேண்டா'' என்று சொல்லி கிட்டி வந்து சுற்றத்தார்களைக் கோபித்துப் பார்த்து

நீங்கள் ஒருவரும் எதிர்நில்லாமல் ஓடிப்போய் பிழையுங்கள், இல்லாவிட்டால் எனது வாளினல் கூருக்கப்பட்டு துடிக் கின்றீர்'' என்று எச்சரித்தார். அதற்கு அவர்கள் ''ஏடா நீ என்ன காரியஞ் செய்தாய் இப்படிச் சொல்லுகின்ருய். நாட்டவர் பழியையும் பகைவர் நகையினையும் பற்றி நாணு கின்ருயில்லை. உன் மனைவியை வேதியர்க்குக் கொடுத்து விட்டா இப்படி வீரம் பேசுகின்ருய், நாங்களும் கூடவே மாண்டுபோவதே அல்லாமல் அவளை நீ கொடுக்க நாங்கள் சம்மதிக்க மாட்டோம்'' என்ருர்கள்.

இயற்பகையார் கடுங்கோபங் கொண்டு, ''உங்களை எல்லாம் துண்டித்து வீழ்த்தி சுவர்க்கத்திற்கு ஏற்றிவிட்டு இத்தவசியைப் போக விடுவேன்'' என்று எழுந்தார். அவர்களோ இவர் மேற்செல்லாது பெண்ணைக் கொண்டு போகும் வேதியர் மேற்சென்று எதிர்த்துத் தடுத்தார்கள், இயற்பகையார் சீறி அவர்கள் மேற் பாய்ந்து வாளுந் தாமுமேயாக அத்தனை பேருக்கும் அத்தனை பேராய் விரைந்து இடசாரி வலசாரியாக மாறி வந்து அவர்களை யெல்லாம் கையுங் காலுந் தலையுமாகத் துண்டித்து வீழ, உயிர்க்குத் தப்பி ஓடினவர்களே பிழைத்தனர் .ஒழிந்தவர் ஒழிந்தே மாண்டனர்.

அதன்பின் வேதியரை நோக்கித் ''தேவரீர் அஞ்சாது இந்தச் சோலையைக் கடக்க நான் துணை வந்து வழி விடுவேன்'' என்று சொல்லி நாயனுர் கூடவே போயினர். முன்னே வேதியரும் பின்னர் அம்மையாரும். அவர் பின்னே இயற்பகையாருமாகச் சென்று சோலை கடந்து திருச்சாய்க்காடு என்னும் தலத்தை அணையவே வேதியர் இயற்பகையாரை நோக்கி ''இனி நீ மீள்க'' என்ருர். அவரும் இவரது பாதங்களைப் பொருந்தப் பணிந்து ''இவரது திருவருள் பெறப் பெற்றேன்'' என்று மகிழ்ந்து மீண்டார். இவ்வாறு அவர் போகவே வேதியர் மகிழ்ந்து நோக்கி ''பொய்ம்மையில்லாத மனமுடையான், திரும்பிக்கூடப் பாராமற் போயினுன்'' என்று அவரை மீளவும் ''இயற்பகை முனிவா ஓலம் ஈண்டு நீ வருவாய் ஓலம்'' என்று பன்முறை ஓலமிட்டுக் கூவி

அழைத்தனர். அவர் அது கேட்டு "அடியேன் இதோ வந்தேன் வந்தேன் இன்னும் பிழைத்தவர்கள் உண்டானுல் என் வாளினுல் வெட்டுண்கிருர்கள்'' என்று சொல்லிக் கொண்டே விரைந்து மீண்டு வந்தார். அப்போதே வேதியர் மறைந்தனர். வந்தவர் வேதியரைக் காணவில்லை. அம்மையாரை மட்டும் கண்டார். வானிலே விடையில் மேல் உமையம்மையாரும் தாமுமாக இறைவன் காட்சி தரக் கண்டார். வீழ்ந்தனர், எழுந்தனர், பன்முறையும் பல்வகையும் போற்றி போற்றி என்று துதித்தனர். இறைவன் தமக்குச் செய்த பேரருளைப் போற்றி நின்றனர்.

இறைவன் தொண்டரை நோக்கி "இவ்வாறு உலகிலே நீ நம்மிடத்துப் பண்ணிய பரிவு கண்டு மகிழ்ந்தோம். நண்ணிய மனைவியோடு நம்முடன் போதுக! என்று அருளிச் செய்து இவர்க்குத் தக்க பேறு தந்து பொன்னம்பலத்திலே எழுந்தருளினுர். தேவர்கள் பூமழை பொழிந்தனர். மறைகள் ஆர்த்தன. ஞான முனிவர் போற்றினர். தொண்டனுர் சிவலோகத்திலே கும்பிட்டு உடனுறையும் பெருமை பெற்ருர். மற்றைச் சுற்றத்தார்களும் சுவர்க்க இன்பம் பெற்ருர்கள்.

## கற்பனை

1) காவிரியின் நாடு பாய்ந்து மிக்க நீரும் வீணுகாது கடலிற் பாய்ந்து உடலைக் கழுவவும் தீர்த்தம் ஆக்கியது போல, மனிதர் முழுமையும் பிறர்க்குதவும் உதவியே செய்தல் வேண்டும். தமது எப்பொருளிலும் ஒரு சிறிதும் வீணுக்காது பிறர்க்குதவி புரிதலில் செலுத்தல் வேண்டும்.

2) சிவனடியார்க்கு வேண்டுவனவற்றை இல்லையென்ருது கொடுத்தல் சிறந்த பதி தருமமாம்.

3) சிவனடியார் நினைத்தவற்றை முடித்து அவர்களை மகிழ்விப்பதுவே இல்வாழ்க்கையின் சிறந்த பேறு.

4) பெண்கள் தம் கணவர்களை தம் உடம்பு மட்டில் நாயகர்களாகக் கொண்டு ஒழியாது, உயிர் நாயகர்களாகக்

கொண்டு அவர்கள் சொல்லியது எதுவோ அதன்படி செய்து அவ்வழி ஒழுகி வருதல் வேண்டும், அதுவே உண்மைக் கற்பு நிலையின் பெருமையும் ஆம் ''உரிமை வேறுளதோ எனக்கு''

5) குலவொழுக்கம் குலநலம் என்பவை பாராட்டிப் பாதுகாத்தற்குரியன. குலத்துக்குப் பழி வாராமற் காத்தல் அக்குலனுடையார்க்கெல்லாம் வேண்டற்பாலது.

6) குலநலங் காத்தலும் குலப்பழி வாராமற் காத்தலும் உயிரினுஞ் சிறந்தது. உயிர் கொடுத்தேனும் மானங்காத்தல் வேண்டும்.

7) உலக தருமங்களிலே பிறன்மனை நயத்தல் ஒருவர்க்குப் பெரும் பழி, ஒருவன் தன் மனைவியைப் பிறருக்கு ஈதல் அவனுக்குப் பெரும் பழி, ஒருவன் மனைவி வேறொருவருடன் வாழ்தல் அவளுக்குப் பெரும் பழி. இவை அவ்வக் குடும்பங்களையே அன்றி குலத்தினையும், நாட்டினையும் பற்றும். இவ்வகைகளை ஒன்றும் கருதாது பலவகையிலும் பழியே பெருக்கி மானத்தைச் சுருக்கி மனம் போன வழியே பெரிதென வாழும் இந்நாள் உலகம் இச்சரிதத்தில் சுற்றத் தாரும் நாட்டவரும் கொண்ட கொள்கையும் செய்த செயலும் கண்டு திருந்தத்தக்கது.

8) அறநூல் வழியே அவரவர் கொண்ட கொள்கைகள் கடைபோகக் காத்தற்குரியன. சமயம் போல கொள்கைகளை மாற்றி வாழும் இந்நாள் மக்களின் வாழ்க்கை இது கண்டு திருந்தத்தக்கது.

8) உலகநீதிகளிலும் உலக அறங்களிலும் சில தருமங்கள் மேம்பட்டன. இல்வாழ்க்கை முதலிய உலக அறங் கள் அவை குறித்த உலக அளவு வரையிலே கொள்ளத்தக்கன. உலக வாழ்வில் தாமரையிலையில் தண்ணீர் போல பற்று வையாது கொண்டு வாழ்தல் உயிர்களுக்கு மேம்படும் வழி தரும். இச்சரிதத்தில் சுற்றத்தார் செயல் உலக நிலையில் வாழ்க்கையின் குறிக்கோளைக் கற்பிக்கும். இவ்வுலக வாழ்வின்

உயர்ந்த குறிக்கோளை நாயனுர்பால் கண்டு உலகம் கடைப்பிடிக்கத்தக்கது.

10) அகன்ஞாலத்தகத்துட்டோன்றி வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு, வான் புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும் பொருந்தணைமேல் வரும் பயனைப்போக மாற்றிப் பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க்கென்றும் பெருந்துணை'! என்றபடி மனைவி மக்கள் சுற்றம் ஏனைச் சார்புகள் சிவச்சார்புகளின் முன்னே அறுத்தொழிந்த இடத்தே சிவன் வெளிப்பட்டு வழித்துணையாவன்.

''பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்''.

''தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி

வலைப்பட்டார் மற்றையவர். (குறள்)

11) நீறு - கண்டிகை முதலிய சிவசாதனங்களிலே வயமாக்கப் பெற்ற மனமுடையாரது செயல்கள் சாமான்ய பசுபோத உலகநீதி கொண்டு அளக்கப்படா.

12) துன்பத்துக்கேதுவாகிய வெறுங் காமமாதி உலகானுபவங்களிலே ஒன்றென்றில் மயங்கியோர் அவ்வவற்றில் சிக்குண்டு அவையே பெரிதாகக் கொண்டு செய்யும் அடாத செயல்களும் படும்பாடும் பெரிதாம். அதனைவிட்டு அவ்வுயர் வாழ்வினிலே உலகில் வைத்த அந்த ஆர்வத்தில் சிறிது செலுத்துவார்களாயின் நீ உய்ந்து மேற் செல்வர் ''தத்தையங்கனையார் தங்கண் மேல் வைத்த தயாவை நூருயிரங்கூறிட்டு அத்திலங்கொரு கூறுன் கண்மேல் வைத்தோர்க்கு அமருல களிக்கும் நின்பெருமை'' (திருவிசைப்பா)

13) ''பனிமலர்க்குழற் பாவை நல்லாரினும்'' இனியனுய் தன்னடைத்தார்க்கருள் புரிவன் சிவன்; சிவனடியாரின் திருவேடத்திலே சிவனைக் கண்டு வழிபடில் சிவனே அங்கு நின்று அருள் புரிவான்.

14) இளமங்கையர் தோளில் பூசிய சாந்து முதலியன காமுகரை வயமாக்குதல் போல அடியார்கள் மேல்நின்ற நீறு

கண்டிகை முதலிய சாதனங்கள் அன்பு உடையவர்களை தம்வயப்படுத்தி ஈடுபடச் செய்யும்.

15) "உருப்பொலாதவ ரிழிகுலத்தவர் நல்லொழுக்க மில்லவரென்று நம்மளவில், வீருப்பிலாதவரெனினு மெய்ந்நீறு மிக்க சாதன வேடமுங் கண்டாற், றரிப்பிலாது சென்றெதிருற வணங்கித் தக்க போனக மளித்தவர்க் கெளிதா விருப்பர் தாமவரடியவர்க்கடியா ரென்பர் யானெனதெனுஞ் செருக் கறுப்பார்" என்று திருவாதவூரடிகள் புராணத்து உபதேசிக்கப் பெற்ற உண்மை இங்கு அதிதீவிரதர பக்குவமுடைய நாயனர் சரிதத்தில் வைத்துக் கண்டு இதன் பெருமை உலகம் உணர்ந்துய்யு நெறி கடைப்பிடித்தொழுகுவதாக.

ஆறுமுக நாவலரவர்கள் எழுதிய சூசனங் காண்க

இயற்பகை நாயனர் புராணம் முற்றிற்று



அண்ணலே யெனை ஆண்டு கொண்டருளியே அமுதே
விண்ணிலே மறைந்தருள்புரி வேத நாயகனே
கண்ணினல் திருக்கயிலையில் இருந்த நின்கோல
நண்ணி நான் தொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார்

கடைமருங்கில் இளம்பிறையுந் தனிவிழிக்குந் திருநுதலும்
இடமருங்கில் உமையாளும் எம்மருங்கும் பூதகணம்
புடை நெருங்கும் பெருமையு முன் கண்டாசன் போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல் வேந்தற்கருள் கொடுத்தான்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# 4. இளையான்குடி மாற நாயனார் புராணம்

## தொகை

" இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்"

## வகை

இயலாவிடைச் சென்ற மாதவர்க்கு இன்னமுதா
விதைத்த
வயலார் முளைவித்து வாரிமனை யலக்கால் வறுத்துச்
செயலார் பயிர்விழுத் தீங்கறி யாக்குமவன் செழுநீர்க்
கயலார் இளையான்குடியுடை மாறன் எங்கற்பகமே.

## புராண சாரம்

மன்னிய வேளாண் தொன்மை இளசை மாறர்
வறுமையால் உணவுமிக மறந்து வைகி
உன்னரு நள்ளிருள் மழையில் உண்டி வேண்டி
உம்பர்பிரான் அணையவயல் உழுதுவித்தும்
செந் நெல்முளை அமுதுமனை அலக்கா லாக்கிச்
சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து
பன்னலரும் உணவு அருந்தற்கு எழுந்த சோதிப்
பரலோக முழுதாண்ட பான்மையாரே.

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்

# இளையான்குடி மாற நாயனார்

## புராணச் சுருக்கம்

இளையான்குடியிலே வாய்மையில் நீடிய சூத்திர நற் குலத்திலே மாறனார் என்ற பேருடைய பெரியார் அரனிடத் திலும் அடியாரிடத்திலும் அன்புமிகுந்து விளங்கினார். அவர் உழவுத்தொழிலால் வரும் செல்வமும், அடியார் பூசை செய்தல் வேண்டும் என்ற சிந்தையும், தாம் பெற்றவர். அது போலவே உலகர் யாவரும் பெற்று வாழவேண்டும் என்ற விருப்பமுடையவராய், இவ்விரண்டும் பெற்றதனால் உளதாம் நீடு பயன் கொள்வராகி சிவனடியார்கள் யாவரேயாயினும் தம்முன்னர் வருவாராயின் அவர்கள் அடியார்கள் ஆவார் என்பதொரு திறத்தையே நினைத்து அவர்களை எதிர்கொண்டு அழைத்து தமது மனைக்குக்கொண்டு வந்து பாதம் விளக்கி, ஆசனத்தில் இருத்தி பூசித்து, நான்கு வகையாலும், ஆறு சுவையாலும் அமைத்த நல்ல உணவு ஊட்டி வந்தார். இவ் வாறு நாளும், நாளும் எண்ணில்லாத அடியார்கள் வந்து மாகேசுர பூசை கொண்டு மகிழ்ந்து ஆசீர்வதித்து சென்றதன் பயனாகக், குபேரன் போலச் செல்வங்கள் எல்லாம் நிறையப் பெற்றவராய் மாறனார் வாழ்ந்து வருவாராயினார்.

செல்வம் மிக்க நாளிலே இப்படியாகச் செய்வதன்றியும், உண்மையாகவே வறுமை வந்து துன்பம் நேரிட்ட காலத்தும், இப்படியே செய்ய இவர் வல்லவர் என்று உலகத்துக்கு அறிவிக்கும் பொருட்டு சிவபெருமான் இவரது செல்வங்களை நாள்தோறும் மெல்ல மறைந்து போகும்படி திருஉள்ளம் கொண் டனர். இவ்வாறு வளங்கள் எல்லாம் சுருங்கவும், இளையான்குடி மன்னராகிய மாறனார், தம் மனம் சுருங்குத

லின்றி தமது பொருள்களை மாறியும், கடன்கள் கொண்டும் முன் செய்துவந்த அடியார் பூசையாகிய ஒப்பற்ற திருப்பணியிலே முதிர்ந்த கொள்கையராய் செயல்புரிந்து வந்தனர்.

இந்நாளில் ஒருநாள், உலகம் உய்யும் பொருட்டு ஒரு நற்றவத்தவர் வேடமேகொண்டு இறைவன், இவர் மனைக்கு எழுந்தருளி வந்தனர். அக்காலம், மழைக்காலத்து, ஒரு நாளில் நள்ளிரவாய், ஊணும், உறக்கமும் இன்றி, வேறு ஆதரவும் இன்றி, மனைவாய்தல் அடைக்கப்பட்டிருந்த காலமாய் இருந்தது. அக்காலத்தேயும் நாயனுர் கதவைத்திறந்து, வந்த விருந்தை எதிர்கொண்டு அழைத்து, திருமேனியை ஈரம்போக்கி ஆசனம் தந்து அமரச்செய்தபின் அவர்க்கு உணவு ஊட்ட எண்ணினுர்.

"முன்பு நமக்கு உணவில்லை! ஆயினும் இவ்வடியவரை அமுதூட்டல் எங்ஙனே? என மனைவியாரை வினவினுர் நாயனுர்." "அவர் மற்றொன்றும் காண்கிலேன்; நேரம் அகாலமாயிற்று; தருபவரும் வேறு எவருமிலர்; போமிடமும் வேறில்லை. வயலிலே, இன்று பகலில் விதைத்த நெல் முளைகளை வாரிக்கொண்டு வந்தால், வல்லபடி அமுது அமைத்தலும் கூடும் என்றனர். வானம் பிறங்க, மழை பெய்து, வழி இது பக்கம் இது என்று தெரியாதபடி மைய்க்குழம்பு போன்ற இருள் சூழ்ந்த அந்த நள்ளிரவிலே, ஒரு பெரிய இறை கூடையை தலையிலே கவிழ்த்துக்கொண்டு, கால்களினுலே தடவி, முன் பழக்கக்குறியினுலே, வயலுட்சென்று, நீரில் மிதந்து, வரப்பு ஓரங்களில், சார்ந்திருந்த நெல் முளைகளை வாரிக் கூடையில் கொண்டுவந்து, நாயனுர் மனைவாயிலில் தம்மை, எதிர்நோக்கி நின்ற மனைவியாரிடம், கொடுத்தனர். மனைவியார் விறகு இல்லை என, வீட்டுக்கூரையின் அலக்குகளை அறுத்து வீழ்த்து நாயனுர் விறகாக்கினுர். மனைவியார் நென்முளையை வறுத்து அரிசியாக்கி அமுதாக்கினர். வீட்டுக் கொல்லையிற் குழிநிரம்பாத புன்செய்ப் பயிர்களைப், பாசப்பழி முதல் பறிப்பவர்போல வேரோடும் பறித்துத்தர, அவற்றை மனைவியார் தமது கைவினைப் பழக்கத்தால் பற்பல கறிவகைகளாகச் சமைத்தனர்.

பின்னர் அங்குத் துயில்கொண்டார் போன்று பள்ளி கொண்ட அரனடியவர்பால் அன்பாகச் சென்று "அழுந்திய இடருள் நீங்கி அடியேன் உய்யும்பொருட்டு என்னிடம் எழுந்தருள் பெரியோய்! ஈண்ட அமுது செய்தருள்க." என்று துயிலுணர்த்தினர்.

அவர் வடிவம் ஒரு சோதியாய்த் தோன்றிற்று. அன்பரும், மனைவியாரும் திகைத்து நின்றனர். இறைவன் விண்ணிலே விடையின்மேல், உமையம்மையாருடன் எழுந்தருளிக்காட்சி தந்து "அன்பனே அடியார் பூசை பாதுகாத்தளித்த நீ மனைவியோடும் எமது உலகத்திற் சேர்ந்து, குபேரனே இரு நிதியம் ஏந்தி உன் சொல்வழி முன்னின்று ஏவல் கேட்ப, இன்பம் பெற்று இருக்க" என அருளிச்செய்தெழுந்தருளினர்.

## கற்பனை

1) ஏரின் செல்வம் எல்லையில்லாத வளங்களையும் சிறப்பையும் தருவது. அதனைப் புறக்கணித்து ஒதுக்காது பாதுகாத்துப் போற்றுதல் வேண்டும்.

2) செல்வமும், சிவசிந்தனையும் பெற்று அவ்வொழுக்கத்து சிறந்து நிற்றல் சிறந்தது:

3] சிவனடியார் பூசையும் அவர்க்கு அன்போடு அமுதூட்டலும் சிறந்த புண்ணியமாம். இதனிற் சிறந்த புண்ணியம் வேறில்லை.

4) "அகரமாயிர மந்தணர்க் கீயிலென்
சிகரமாயிரஞ் செய்து முடிக்கிலென்
பகருஞானி பகலூண் பலத்திற்கு
நிகரில்லை யென்பது நிச்சயந்தானே

ஆறிடுவேள்வி அருமறை நூலவர்
கூறிடு மந்தணர்கோடி பேருண்பதில்
நீறிடுந்தொண்டர் நினைவின் பயனிலே
பேறெனி லோர்பிடி பேறதுவாமே"

(திருமந்தரம்)

என்பனவாதி விதிகளுக்கு இச்சரிதம் இலக்கியமாய் நிற்பதுடன் அடியவர் பூசையின் பயனையும் இனிது விளக்குவதாம்.

5) செல்வமுள்ள காலத்துச் சிவபூசையும், அடியார் பூசையும் பேணுதல் போலவே வறுமை வந்த காலத்தும் அவை தளராது மிகப் போற்றற்குரியன. அங்கே சிவன் வெளிப் பட்டருளுவன்.

6) செல்வமுள்ளபோது சிறிதளவிற் செய்த சிவப் பணிவிடைகளையும் சிறிய துன்பம் முதலியன நேர்ந்தபோது சிவனை நொந்து கைவிடுவார் பலர். அது செய்யலாகாது. எஞ்ஞான்றும் உயிர்களுக்கு நலமே செய்பவராய் நன்றேயுடையாராய்த் தீயதில்லாதாராய், உயிர்களுக்கு அவற்றினும் இனியராய், உள்ள சிவபெருமானை எத்துணையானும் நோபவர் தமக்கு இடர் தேடியவரேயாவர். செல்வமும், வறுமையும் இறைவன் திருவருள் வழியே வருவன என்றும், அவற்றுள் வறுமை நமது நன்மைக்கே காரணமாய் வருவது என்றும், உணர்ந்து ஒழுகுதல் வேண்டும். ''விரைந்தாளு நல்குரவே'' ''நோவுளார் வாயுளான்'' முதலிய திருவாக்குக்களின் உண்மையை இச்சரிதத்தில் வைத்து உணர்ந்து நாள்தோறும் மக்கள் தமது உலக ஒழுக்கத்திற் பின்பற்றக் கடவர்.

7) உண்மை உணர்ந்தோர், தமக்கு எவ்வளவு பெரிய இடர்களும் துன்பங்களும் வந்த போதிலும், சிவபெருமானிடத்திலும், சிவனடியாரிடத்திலும், வைத்த அன்பினிற் சிறிதும் குறைவுபடா தொழுகுவார்.

8) தமக்கே உணவில்லாதிருந்த நிலையிலே, பெருமழையிலும் பேரிருளிலும், பாதி நள்ளிரவிலும், வயலினுட் சென்றும், அன்று விதைத்த நென்முளைகளை வாரி அமுதாக்கியும், விறகுக்காக வீட்டுக் கூரையை அறுத்தும், புன்செய்க் குறும்பயிர்களை வேரொடும் பறித்துக், கறிவகைகளாக்கியும், மனதார, அமுது படைக்க முற்பட்ட நாயனர் மனைவியார் இவர்களது அன்பின் திறத்தில் ஒரு சிறிதளவேனும் உணர்ந்து, உலகம், பின்பற்றுமானுற், கடைத்தேறி உய்யும்.

9) நாயனாரும், மனைவியாரும், மிக்க செல்வத்திலேயும், அது மாறிய மிக்க வறுமையிலேயும், கொண்டு செலுத்திய இல்வாழ்க்கை, நலத்தில் ஆயிரம் கூறில் ஒரு கூறேனும் இந்நாள் மக்கள் தத்தம் இல்வாழ்க்கையிற்கைக் கொண்டு வாழ்கின்றார்களா? என்பது அவ்வவர் வாழ்க்கையினை நோக்கிச், சிந்திக்கத் தக்கது. ''இல்லானை இல்லாளும் வேண்டாள் மற்று ஈன்றெடுத்த தாய் வேண்டாள் செல்லாதவன் வாயிற் சொல்'' ''இல்லாரை எல்லாரும் எள்ளுவர்'' ''பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை'' முதலிய உலக நீதியின் நிலைகளை எல்லாம் அடிப்படுத்தி, வென்று. இகத்திலேயும் பரத்திலேயும், தமக்கும், பிறர்க்கும் இன்பம் வரச்செய்த மனைவியாரது கற்பின் திண்மையும், அவ்விருவரது அன்பின் உறைப்பும், உலகம் பல்காற்சிந்தித் துய்வதாக. ஒன்றுக்கும் கட்டுப்படாத அடங்காத்தனமே வீடுபேறு என்ற பேய்த்தனமாகிய பித்துக்கொண்டலையும் இந்நாளின் நாகரிகப்பேர் கொண்ட பேயுகலம் இச்சரிதத்திற் கண்ட வறுமையிற் செம்மை பெற்றதாய், மாசற்றதாய்த், தூயதாய் மனமொத்ததாய் நிகழ்ந்த இல்வாழ்க்கை நிலையினைச் சிந்தித்துச் சிந்தித்துத், திருந்தி உய்வதாக.

10. விளைநிலமும், வீடும், வருங்கால வாழ்வுக்கென்று பிற ஆதரவுகள் முதலிய பற்றுக்களும் அற்ற இடமே ஒருவனுக்கு வீடுபேற்றின் நிலைதருவதாம்: '' பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் '' - குறள். '' யானெனதென்றற்ற இடமே திருவடியார்''- (கந்தர்கலி) முதலிய திருவாக்குகளின் உண்மை இங்கு விளங்கக் காணலாம். நிலையாத வாழ்வினைத் தந்து, நிலைத்த வாழ்வினைக் கொள்ளுதல் பேருதியமான வாணிபமுமாம். ''தந்ததுன் தன்னைக் கொண்டதென்றன்னைச் சங்கரா ஆர்கொலோ சதுரர்? என வாதவூரடிகள் அருளியபடி முளைத்த நெல்லும் ஓட்டை வீடும் குறும்பயிருங்கொண்டு, இங்குச் சாவா அமுதமும், நிலைத்த வீடும், நெடுநிதியமும் தந்த இச்சரிதம் உலகர்க்கு அருங்கற்பனை கற்பித்து ஆள்வதொன்றாகும்.

11) சிவனடியார் பூசை இவ்வுலகத்திலேயும் எல்லாச் செல்வங்களையும் தரும். அம்மையிலே பேரின்பமுந்தரும். "இம்மைவானவர் செல்வம் விளைத்திடும்; அம்மையேற் பிறவித்துயர் நீங்கிடும்" - (திருக்குறுந்தொகை திருவிடை மருதூர்) "இம்மையே தருஞ்சோறுங் கூறையும் ஏத்தலாம் இடர்கெடலுமாம் அம்மையே சிவலோக மாள்வதற்கியாதும் ஐயுறவில்லையே. – (நம்பிகள் – திருப்புகலூர்). என்ற தமிழ் மறைகளிற் கண்ட உண்மைகள் அரன் பூசைக்குரியன. அதுபோலவே அரனடியார் பூசைக்கும் உரித்தாயினவாம்.

12) சிவனடியார் வேடங்களைச் சிவனெனவே கொண்டு வழிபடுதல் வேண்டும். "நேயமலிந்தவர்வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" - (சிவஞானபோதம்) இதன் தத்துவத்தை மேல்வருஞ் சரிதத்தினுங் காண்க. அடியார் பூசை அளிக்கும் முறையினை இச்சரிதத்தினின்றும் உலகம் உணர்ந்தொழுகி உய்வதாக.

இளையான்குடி மாற நாயனார் புராணம்
முற்றிற்று.

---

வையகம் பொலிய மறைச்சிலம் பரற்ற
மன்றுளே மாலயன் தேட
ஐயர்தம் வெளியே யாடுகின் றாரை
யஞ்சலி மலர்த்திமுன் குவித்த
கைகளோ திளைத்த கண்களோ வந்தக்
கரணமோ கலந்த அன்புந்தச்
செய்தவம் பெரியோன் சென்று தாழ்ந் தொழுந்தான்
திருக்களிப்படி மருங்கு

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# 5. மெய்ப்பொருள் நாயனர் புராணம்

### தொகை

"வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கு அடியேன்"

### வகை

"கற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்தாற்
செற்றவன் றன்னை யவனைச் செறப்புகலுந் திருவாய்
மற்றவன் தத்தா! நமரே யெனச் சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதிபன் மெய்ப்பொருளாம் என்றுபேசுவரே"

### புராண சாரம்

சேதிபர்நற் கோவலூர் மலாட மன்னர்
திருவேடம் மெய்ப்பொருளாத் தெளிந்த சிந்தை
நீதியினுருடன் பொருது தோற்ற மாற்ருன் நெடுஞ்
சினமுங் கொடும் படையும் நிகழா வண்ணம்
மாதவர்போல் ஒருமுறை கொண்டு அணுகி வாளால்
வன்மை புரிந்திட மருண்டு வந்த தத்தன்
காதலுற 'நமர் தத்தா' என்று நோக்கிக் கடிதகல்வித்து
இறைவனடி கைக்கொண்டாரே.

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்

# மெய்ப்பொருள் நாயனர் புராணம்

## புராணச் சுருக்கம்

சேதி நாட்டிலே திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு மலையமான் என்னும் பரம்பரைச் சைவ அரச மரபினர் நாடாண்டு வந்தனர். அந்த மரபில் அவதரித்தவர் மெய்ப்பொருள் நாயனர். அவர் வேதநெறியின் வாய்மை விளங்க ஒழுகுபவர். சிவன்டியார் கருத்தறிந்து அவர்களுக்கு ஏவல் செய்வார். அரசியல் அறநெறி காத்துப் பகையரசர் களைத் தனது வன்மையினுற் செயிப்பார். அன்பர் திருவேடமே சிந்தைசெய்வார். சிவபெருமான் திருக்கோயில்கள் எங்கேயும் நித்திய பூசையும், திருவிழாக்களும் வழாமல் நடைபெறச் செய்து வாழ்வார். அடியார்களது திருவடிகளையன்றி வேறு சார்பில்லார். தமது செல்வங்கள் எல்லாம் அடியார்களுடை யனவே எனக் கொண்டவராய் அடியார்கள் வந்தபோது மகிழ்ச்சியுடன் குறைவறக் கொடுத்து வருவாராயினர். இவ் வாறு ஒழுகு நாளில் ஒரு அரசன். இவரை வெல்லும் ஆசை யினுலே போரிலே இவரை எதிர்த்துப் பலமுறையுந் தோல்வி யுற்றுத் தனது சேனைகளையுமிழந்து, அவமானப்பட்டுப் போனுன். இப்படி இழந்த பகைவன், நேரில் போர்செய்து வெல்லமாட்டாதவனுய், மெய்ப்பொருள் நாயனரது சைவ சீலத்தையறிந்து, திருநீறு சாத்தும் அப்பெருவேடம் கொண்டு வஞ்சனையினுல் வெல்லவேண்டுமென்று, சொல்லவுந் தகாத நிலையை எண்ணி, அதற்காக உடல் முழுவதும் திருநீறு பூசி, சடை முடித்துக்கட்டி கையிலே படையை மறைத்துக் கட்டிய புத்தகப் பையை ஏந்திக்கொண்டு, மையை உட்பொதிந்த விளக்குப்போல மனத்துள்ளே வஞ்சக் கறுப்பு வைத்துப், பொய்தவ வேடம்கொண்டு முத்தநாதன் என்ற அரசன் திருக்

கோவலூரிற்புகுந்தவனுய், ஆடற்பெண் கொடிகளும் மேலே வெண்கொடிகளும் ஆடும் மாடங்கள் நிறைந்த திருவீதி வழியே சென்று அரசரது அரண்மனை வாயில் சேர்ந்தான், வாயிற்காவலர்கள் அடியவர் தாமே எழுந்தருளினர் என்று உள்ளே புகவிட்டனர். பலவாயிலும் புகுந்த பின்னர்க் கடைசி வாயிலிற் காவல் செய்திருந்த தத்தன் "சமயம் நோக்கி அருள்புரியவேண்டும் இறைவன் துயில் கொள்ளும் என்முன்." "நான் இவற்கு உறுதி கூற வந்தேன். ஆதலின் ஏனையோர் போல நீயும் நில்" என்று அவனையுங் கடந்து உட்புகுந்தான். கட்டிலிலே அரசர் துயிலவும் பக்கத்தே மாதேவியிருப்பவுங் கண்டும் பக்கத்துச் சென்றணைந்தனன், அதுகண்டு மாதேவி எழுந்து அவரை எழுப்பினர். சிவனடியார் வந்தனராகும் என்றுணர்ந்த மன்னர், கைகூப்பித் தொழு தெழுந்து வணங்கி நின்று "மங்கலம் பெருக என் வாழ்வு வந்தணைந்தது போல இங்கு அடிகள் வந்தருளியது யாது கருதியோ" என்று கூற, அவன் "உங்கள் நாயகனுர் முன்னே அருளிய ஆகமநூல் மண்மேல் எங்கும் இல்லாததொன்று உனக்கு உபதேசிக்கக் கொண்டுவந்தேன்". என்முன். "இதன் மேல் வேறு பேறும் எனக்குண்டோ? இறைவன் அருளிய ஆகமத்தை வாசித்தருள் செய்க" என அரசர் கேட்க அவன் "தேவியார் இங்கிருப்பது தவிரவும், நானும் நீயும் (அதற்காக) வேறிடத்திலே இருக்கவேண்டும்" என்முன்.

அவ்வாறே அரசர் மாதேவியாரை விரைவாக அந்தப் புரத்திடைப் போக ஏவிப் பின் தவவேடத்தானை ஆசனத்தி, விருத்தித் தாம் நிலத்திலே இருந்துகொண்டு, "இனி அருள் செய்க" என்றார். அவன் புத்தகப் பையை அவிழ்ப்பவன் போல இருந்து அவர் வணங்கியபோது படையை எடுத்துத் தான் முன் நினைந்த அக்கொடிய செயலைச் செய்ய, "மெய்த் தவவேடமே மெய்ப்பொருள்" எனத் தொழுது, அரசரே வென்றார். மறைத்தவன் புகுந்தபோதே அங்கு மனம் வைத்திருந்த தத்தன் நொடிப்பொழுதில் அவனை வாளினுல் எறிப் புக்கான். மிகுதியும் இரத்தம் சோர்தலால் வீழ்கின்ற அரசர்

தமது நீண்ட கையினால் "தத்தா நமரேகாண்" என்று சொல்லி அவனைத் தடுத்து விழ்ந்தார். "இனி நான் யாது செய்கேன்?" என்று தத்தன் கேட்க, அரசர் "அடியார் போகும்போது யாரும் இடைவிலக்காதபடி கொண்டு போய் விடுதி" என்றார். இதனை அறிந்தார் பலரும் வழியிலே மறித்து "அரசரைத் தீங்கு செய்த பொய்த்தவனைக் கொல்வோம்" எனச் சுற்றிச் சூழ்ந்தனர். "இவன் போகப்பெற்றது அரசனது ஆணையாகும்" என்று தத்தன் அவர்களை எல்லாம் விலக்கி, ஆள் அணுகாத கானம் சேர அவனை விட்டு மீண்டு வந்து அரசரை வணங்கி நின்று, "செய்தவ வேடங்கொண்டு வென்றவனுக்கு இடையூறின்றிக் கொண்டுபோய் விட்டேன்" என்றான். அது கேட்பதற்காகவே, சோர்கின்ற உயிரைப் போகாதே தடுத்துத் தாங்கி இருந்த அரசர் "இன்று எனக்கு ஐயன் செய்தது யார்செய்ய வல்லவர்?" என்று நன்மொழி கூறி, அரசியல் ஆயத்தார்க்கும், காதலார்க்கும் "விதியினாலே திருநீற்றன்பு நெறியைப் பாதுகாத்துச் செலுத்து வீர்களாக?" என்று உறுதி கூறியபின் அம்பலக்கூத்தரது ஆடுங்கழலைச் சிந்தித்தார்.

இறைவன் தம்மை முன் அவர் கண்டவாறே எதிரே நின்று காட்சி தந்து அவரைத் தேவர்க்கும் அரிய தமது அருட் கழல் நீழல் சேரும்படிக் கொண்டு தம்மை இடையறாமற் கும்பிடும் கொள்கையை ஈந்தருளினர்.

## கற்பனை

1) அரசியல் அறநெறி வழாமற் காத்தலும் குடிகளைப் பகைவர் முதலிய ஐந்து பயங்களினின்றும் காத்தலும் நீதி விதிப்படி அரசியற்றலும் அரசர் கடன்.

2) அன்பர் வேடம் அரனெனச் சிந்தித்துத் தொழுதற் குரியது.

3) வேத வாய்மை காத்தலும், இறைவன் கோயில்களி லெங்கும் நித்திய பூசையும் சிறப்பும் வழாது நடைபெறச் செய்வதும் அரசர்களது முக்கிய கடமைகளாகும்.

பனந்தாளிற் சேர்ந்தனர். யானை சேனைகள் இளைத்து வீழ்ந்து எழமாட்டாதநிலை கண்டு மனம் வருந்தினர். ''இவ்விளைப் பினை நானும் கூறு கொண்டு அவ்வளவிற்கு இவற்றின் வருத்தத்தைக் குறைக்க முயல்வேன்'' என்று துணிந்தார். இறைவரது திருமேனிப் பூங்கச்சிற்கட்டிய பெரிய வலிய கயிற்றினைத்தம் கழுத்திற்பூட்டி இழுத்து வருந்தலுற்றார். இவர் இவ்வாறு செய்து இளைத்தபின் இறைவர் திறம்பி நிற்க ஒண்ணுமோ? இவர் தமது அன்பின் ஒருமைப்பாட்டினைக் கண்டபோதே அண்ணலார் நேரே நின்றார். தேவர்கள் விண்ணில் ஆர்த்துப் பூமாரிபெய்தனர்,

வாடியசோலை மேகம் பெற்றுக் களிப்பது போல யானை சேனைகள் களித்தன. சோழ மன்னன் கலயனாரது பாதங்களில் வீழ்ந்து வணங்கி மேருவை வில்லாக வளைத்துப் புரமெரித்த கடவுளின் செந்நிலை காணச் செய்தீர், திருமாலுங் காணாத மலரடியிணைகளை அன்புடை அடியாரே அல்லால் நேர் காண வல்லார்யாவர்? என்று துதித்தான். பின்னர் அரசன் இறைவர்க்குப் பிற பணிகள் பலவுஞ்செய்து தனது நகரத்துக்குச் சென்றான். அரசன் போயின பின்னரும் கலயனார் சிலநாள் இறைவனைப் பிரியலாற்றாது அங்குத் தங்கி வழிபட்டுப் பின் திருக்கடவூர் சேர்ந்தனர்.

சிலநாள்களின் பின்னர் ஆளுடைய பிள்ளையாரும் ஆளுடைய அரசுகளும் கூடித் திருக்கடவூருக்கு எழுந்தருளினார்கள். மிக்க மகிழ்ச்சி பொங்கக் கலயனார் அவர்களை எதிர்கொண்டு அழைத்துத்தமது தமது திருமனையில் அவர்களது பெருமைக்கேற்றவாறு இன்னமுது அளித்து வழிபட்டு அவர்களதருளேயன்றி இறைவரது அருளும் பெற்றார்.

இவ்வாறு கலயனார் அரனுக்கும் அடியவர்க்கும் ஏற்றன வாய்த் தமக்கு நேர்ந்த பணிகள்பலவும் செய்து வாழ்ந்திருந்து சிவபெருமானது திருவடி நிழலிற்சேர்ந்தனர்.

கற்பனை :

1. சிவசந்நிதியில் உண்மையன்புடன் விதிப்படி நறு மணமுடைய குங்கிலியத்தூபம் கமழ்வித்தல் சிவபுண்ணியமாம்.

2. அத்திருப்பணிக்கு இறைவர் மகிழ்ந்து கரும்பினிற் கட்டி போல இனிய திருவருள் புரிவர்.

3. தமது திருவடிகளை மெய்யன்போடு ஒருப்பட்ட சிந்தை யுடன் பற்றுவார்க்குச் சிவபெருமான் காலபயத்தினை நீக்கி-யருளுவர்.

4. சிவபெருமான் திருவடிகளில் உருகிய அன்பு கூர்ந்து மேன்மேல் எழுகின்ற வேட்கையுடன் சிவத்திருப்பணிகள் செய்தல் வேண்டும்.

5. சிவத்திருப்பணிகள் செய்து வரும் காலத்தில் வறுமை முதலிய இடையூறுகள் நேர்ந்து மேன்மேல் வந்தடர்வன வாயினும் அவற்றைப் பொருட் படுத்தாமலும், அவற்றால் வருந்தாமலும் தமது பணியிற் சலியாது செய்து வருதல் அன்பு டையார் திறம். அத்திறத்தினுள் நின்று, அந்த அன்பினை நுகர்ந்து நிகரில்லாத பேரின்பத்தை அருளுவர் சிவபெருமான்.

6. தாமும் மனைவியாரும் மக்களும் இரண்டுநாள் பசியோடு கிடக்க நேர்ந்த போதும், அப்பசி தீர்ப்பதற்கு நெல் வாங்கக் கொண்டுபோயின தாலியினைக் கொடுத்து, எதிர் பட்ட குங்குலியப் பொதியினை இறைவரது தூபப்பணிக்கு வாங்கிய கலயனாரது செய்தி அன்புடையார்க்குத் திருத் தொண்டின் உறைப்பினை எடுத்துக்காட்டும் சிறந்த இலக்கியமாம். இதனை முன் வைத்துக்கொண்டு சிவனடித் தொண்டில் மக்கள் அன்புடன் முயல்வார்களாயிற் பெரும் பயன் பெறுவர்.

7. சிவபெருமான் திருப்பணிகளின் நற்பயன் இம்மை யின்பங்களையும் தருவன. இவ்வுண்மைக்கு இந்நாயனாரது சரிதமே ஏற்ற சான்றாகும். 'இம்மையே தரும் சோறும்

கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம், அம்மையே சிவலோகமாள் வதற்கியாதும் ஐயுறவில்லையே என்ற ஆளுடைய நம்பிகள் தேவாரமும் காண்க. அளவற்ற அடியார்களுக்கு உளமகிழ அமுதூட்டிய நலத்தினால் இளையான் குடிமாறர் அளவற்ற நிதி பெற்றுக் குபேரன் போல வாழ்ந்திருந்தனர். "அரிய நீர்மையிலருந்தவம் புரிந்தரனடியார்க் குரிய அர்ச்சனை யுலப்பில செய்த அந்நலத்தால்' சிவநேசர் பூம்பாவையம்மையாரைப்பெற்றனர். சிவபெருமானைப் பூசித்து மகாவிட்டுணுவும் கண்ணனும் மகப்பேறு பெற்றனர். இவை போல்வன பலவும் இங்குநினைவு கூர்க. தம் கொள்கைப்படி மோட்சம் என்ற நிர்வாண பதம் வேண்டினால் தமது புத்த விகாரங்களுக்குப் (கோயில்) போகிற புத்தர்கள் இலங்கையில் [ஈழம்], செல்வம் உடற் சுகம் மக்கள் முதலிய இம்மைச்சுகங்களை வேண்டிய போது அங்குள்ள சிவன் கோயில் விநாயகர் கோயில் கதிரேசன் கோயில்களில் வந்து அர்ச்சனை முதலானவை செய்து வழிபடுகின்றார்கள். நம் சைவர்கள் இம்மைவரங்கள் வேண்டி அன்னிய மதக் கோயில்களில் சென்று வரங்கிடக்கக் காண்கிறோம். இஃதென்ன கொடுமை! வேண்டுவார் வேண்டுவதேயீவானாகிய நமது சிவபெருமான் எல்லாம் வல்லவராய் எல்லாந்தர வல்லவராம் என்ற நம்பிக்கையில்லாதவர்களைச் சைவர் என்று சொல்லுவதெப்படி?

8. கணவர் - மக்கள் - சுற்றத்தார் முதலிய குடும்பத்தார்களைப் பசியில்லாது பார்த்துச் சோறிட்டுக் காத்தல் மனைக்கிழத்தியாகிய மனைவியின் கடன். இதுவே இல்வாழ்க்கையின் உண்மையியல். தாம் என்றும் நீக்கலாகாது அணியும் மங்கல நூற்றாலி கொடுத்தும் அது கொண்டு நெல் பெற்றும் இக்கடமையைச் செய்ய ஒருப்பட்ட கலயனாருடைய மனைவியாரது அரிய செயலும் பெருமையும் பெண்ணுலகம் இலக்கியமாகக் கண்டு போற்றத்தக்கன.

9. மேலே கண்டவாறு கடமை செலுத்திய கற்புடையம்மையாருக்கு நிறைந்த செல்வங்கொடுத்ததும் அதனைக் கணவர் அறியுமுன்பு அவருக்கு அறிவித்ததும், அவர் மூலம் கணவனாரை

அறிவைத்ததும் கற்புடைமைக்குக் கடவுள் வைத்த கருணையின் பரிசுகளாம்.

10. சிவனருளாற் பெற்ற செல்வ முதலிய பொருள்களை அவனருளாகவே கண்டு வணங்கி ஏற்றல்முறை. ஆளுடைய பிள்ளையார் தமக்குச் சிவபெருமான் அளித்த முத்துச்சிவி கையை வலம்வந்து வணங்கிப் பின்னர் அதில் வீற்றிருந்ததும், பூம்பாவையாரைக் கண்ணுதல் கருணை வெள்ளமாகக் கண்டதும் நினைவு கூர்க.

11. சிவபெருமான் தம்பாற்செய்யும் அருட்டிறங்களைக் காணுந்தோறும் ''தகுதியில்லாத சிறியேனாகிய என்னையும் பொருளாக எண்ணி இறைவர் இந்தப் பேரருள் புரிந்தனர்.'' என்று நினைந்து மனமுருகுதல் அன்பின் திறம்.

12. சிவனடியார்களைப் பூசித்து அவர்களுக்கேற்றபடி இனிய அமுது ஊட்டி மகேசுர பூசை செய்து வழிபடுதல் சிறந்த சிவதருமம். அவ்வடியார்களது மகிழ்ச்சிக்குள்ளே சிவபெருமான் அமர்ந்து நின்று, பூசையும் அமுதும் உவந்து ஏற்றுக்கொண்டு தானும் மகிழ்ந்து அருள் புரிவர்.

13. அன்பால் நினைந்து வழிபடுபவர்கள் எவரேயா யினும் அவர்களது எளிமையும் சிறுமையும் பார்த்து அவர்களுக் கெளியனாகத் திருமுடி சாய்த்துக் கொடுத்தும் அவர்கள் வழிபாட்டை ஏற்றருளுவர் சிவபெருமான்.

14. ஒரு அடியார் பொருட்டுத் தாங்கிய அருட்கோல அடையாளங்களை ஏனைஉயிர்கள் அறிந்து உய்யுமாறு பின் னரும் தாங்கி நிற்பது சிவனருட் பெருமையாம். திருநீல கண்டம் முதலியவை காண்க.

15. சிவன் திருமேனியிற்றுங்கிய அருளடையாளங்களை அவ்வாறே வைத்து வழிபடுதல் வேண்டும். அவற்றை மாற்றி நேர்கண்டு கும்பிட ஆசை கொள்ளுதலும், அன்பு வகையே

யாயினும் மேற்கொள்ளற்பாலதன்று' ஆயினும் அன்பு பற்றி யெழுந்த அவ்வாசையினையும் உரிய வகையால் நிறைவாக்கி அருளுதலும் சிவபெருமானது கருணையியல்பு.

16. தேவர்க்கும் அரிய இறைவரது திருமேனியை நேர்காணப் பண்புடையார்களல்லாது வேறெவரும் வல்லவ ரல்லர்.

17. ஆசாரியர்களைப் பூசித்து ஏற்குமாறு வழிபட்டு இன்னமுதூட்டுதல் சிவதருமம்.

18. அவ்வாறு செய்யும் வழிபாட்டினுல் அவர்களது அருளே அன்றிச் சிவபெருமான் திருவருளும் உண்டாகும்.

19. குரு, லிங்கம், சங்கமம் என்ற மூன்றும் வழிபாடு செய்தற்குரிய இடங்களாம். இம்மூன்றிலும் நின்று அவ்வழி பாட்டினை ஏற்றுச் சிவபெருமான் அருள் புரிவர்.

20. அடிமை வழக்கு முன்னுளிலிருந்தது. இந்நாளி லில்லையென்பர். உலக முழுதும் பலவாற்ருனும் அடிமைப் பட்டே வாழ்கின்றது. மக்கள் யாவரும் உலகுக்கு அடிமை யாய் ஒழிகின்ருர்கள். அதைவிட்டு இறைவனுக்கு மீளா அடிமையாய்க்கண்டு ஒழுகினுல் பிறவித்துன்பத்தினின்று நீங்குவர்.

குங்குலியக்கலயநாயனர் புராணம் முற்றும்.

— —

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 12. மானக்கஞ்சாற நாயனர் புராணம்

## தொகை

மலை மலிந்த தோள் வள்ளல் மானக் கஞ்சாறன் ... ...
அடியார்க்கும் அடியேன்

## வகை

கலசமுலைக்கன்னி காதற் புதல்வி கமழ் குழலை
நலசெய்தவத்தவன் பஞ்சவடிக்கிவை நல்கெனலும்
அலசுமெனக் கருதா தவன் கூந்தல் அரிந்தளித்தான்
மலைசெய் மதிற் கஞ்சை மானக் கஞ்சாறன் எனும்
வள்ளலே.

## புராண சாரம்

கஞ்சநகர் மானக்கஞ்சாறனர் சீர்க் காதல் மகள்
வதுவை மணங் காண நாதன்
வஞ்சமலி மாவிரதத் தலைவனுகி வந்து புகுந்து
அவள் அளகம் மகிழ்ந்து நோக்கிப்
பஞ்சவடிக் காம் என்ன அரிந்து நீட்டும் பத்தர்
எதிர் மறைந்து இறைவன் பணித்த வாக்கால்
எஞ்சலில் வண்குழல் பெற்ற பேதை மாதை
ஏயர் பிராற்கு உதவி அருள் எய்தினரே.

**சரிதச் சுருக்கம் :**

கற்பனை

சோழ வளநாட்டில் **கஞ்சாறூர்** என்பது செழித்த மருதநில ஊர்களிற் சிறந்து விளங்குவது. அவ்வூரில் வயல்களும் வாவிகளும் மிளிர்வன. வளமிகுதியால் நெற்பயிர் கமுகளவும் உயர்ந்து வளரும். மாடங்கள் மதில்களாற் சூழப்பட்டுக் கொடி தோரணம் நிறைகுடம் முதலியவற்ருல் அலங்கரிக்கப்பட்டுள்ளன. வழிவழியாய் உழவு தொழிலிற் சிறந்த வேளாண் பழங்குடிகள் அங்கு விளங்கின. வீதிகளில் திருவிழா முழக்கங்களும் மிக்கன.

அவ்வூரில் மெய்ப்பொருளை அறிந்துணர்ந்தாராய், **வேளாண்குலத்தின்** சேமநிதி போன்ருராய் அரசர் **சேனுபதிக்குடி** விளங்க **மானக்கஞ்சாறனுர்** அவதரித்தார். அவர், அரனடியார்களே தம்மையும் தமது உடமைகளையும் உடையவர்களென்று உணர்ந்து, அவர்களுக்கே ஏவல் செய்யும் தொழில் பூண்டு, அவர்கள் வேண்டுவனவற்றைக் கூறுவதன் முன் குறிப்பறிந்து கொடுத்து வந்தனர். அப்பெரியவர்க்கு முன் சிலகாலம் பிள்ளைப்பேறில்லாமலிருந்ததனுல் மகப்பேறு கருதிச் சிவபெருமானை வழுத்திஞர். அவரது திருவருளினுலே இப்பிறவிக் கொடுஞ் சூழலினின்றும் பிழைக்கும் நெறியைத் தமக்குத் பேடித்தரும் ஒரு பெண் மகவை அவர் பெற்றெடுத்தார். நகரமெல்லாம் களிசிறந்து மகிழ, எல்லார்க்கும் பெருங்கொடை அளித்து அப்பெண் மகவைச் சிறப்பாக வளர்த்து வந்தனர். மகவும் வளர்ச்சி அடைந்து உரிய வயதில் மணப் பருவம் அடைந்தது.

அந்தப் பெண்கொடியை ஏயர்கோனுருக்கு மணம் செய்ய முதியோர்கள் வந்து மகப்பேசினர். மானக்கஞ்சாறனுரும் "எந்தம் மரபினுக்குத் தகுந்தன்மையில் இது பொருந்தும்" என்று மணமிசைந்தனர். இதனை அம்முதியோர்கள் அறிவிப்ப ஏயர்கோனுரும் மிக விரும்பி மகிழ்ந்தனர். இருதிறத்தார்க்கும் பொருந்தக் கலியாண நாளினை மதிநூல் வல்லவர் வகுத்தனர். மானக்கஞ்சாறனுரது திருமனையிலும் நகரிலும் மணஅணிகள்

செய்தனர். ஏயர்கோனும் தமது சால்பு நிறை சுற்றம் நிறைந்து சூழ மணவெழுச்சியின் அணிவிளங்கக் கஞ்சாறூரின் மருங்கு அணைவாராயினர்.

மணஎழுச்சி கஞ்சானூரில் வந்து அணைவதற்கு முன், மகளைப் பெற்ற வள்ளலாரது உள்ள நிலைப்பொருளாகிய சிவபெருமான் ஒரு மாவிரதமுனிவராகக் கோலம் பூண்டு உலகமுய்யும் பொருட்டு அங்கு வருவாராயினர். அவரது நெற்றியில் மூன்று கீற்றுக இட்டதிருநீறு குடுமி வைத்து ஒழுங்கின் மயிர்களைந்த திருமுடி அக்குடுமி நுனியிற்கோத்த எலும்புமணி காதில் வெள்ளெலும்பாலாகிய குண்டலம் மார்பில் எலும்புமணித் தாழ்வடம். தோளில் யோகப்பட்டிகையும் மயிர்க்கயிற்றின் பூணூலும் ஒருகையில் திருநீற்றுப் பொக்கணம் ஒருமுன் கையில் எலும்புமணி கோத்த கயிறு இடையில் கோவணமும் அதன் மேல் அசைகின்ற உடையுமாய். இவ்வாறு, நிலத்தோய்ந்த எழுதரிய திருவடியும் அதில் திருபஞ்சமுத்திரையுமாக விளங்கத், திருமேனி முழுதும் நெருப்பை மறைத்த பொடிபோலத் திரு நீற்றினைப் பரக்கப் பூசிக் கொண்டு, தமது திருவடிகள் நீடும் மனமுடைய அன்பரது திருமனையினுட் புகுந்தனர். அது கண்ட பெருந் தொண்டனார் மகிழ்ந்து எதிர் எழுந்து தேவரீர் இவ்விடத்தே வருகையினால் அடியேன் உய்ந்தேன். என்று அன்போடும் பணிந்தார் அவர் "இங்கு மங்கலம் நிகழ்வதென்ன?" என்று கேட்க, அன்பர் அடியேன் பெற்ற பெண் கொடியின் மணம்" என்றனர். அவர் "மற்று மக்குச் சோபனம் ஆகுக" என்று ஆசி கூறினர். உடனே மானக்கஞ்சாறனர் பணிந்து மனையினுட் சென்று மணக் கோலம் புனைந்திருந்த திருமகளாரைக் கொணர்ந்து அவரது திருவடியில் பணிவித்தனர். மாவிரதியாராகிய பெருமான் மணமகளாரது மேகந்தழைத்தது போல நீண்டு வளர்ந்த மலர்க் கூந்தற் புறம் நோக்கித் தொண்டரைப் பார்த்து "இவளது மயிர் நமக்குப் பஞ்சவடிக்காகும்" என்றார் அதுகேட்ட தொண்டனார் "இவர் இதனைப் பொருட்படுத்தி நமக்கு ஆம் எனக் கேட்கும் பேறு பெற்றேன் என்று கொண்டு உடனே உடைவாளை உருவி அக்கூந்தலை

அரிந்து அவர் கையில் நீட்டினர். அதனை வாங்குவார் போல் நின்ற அவர் அந்நிலையின் மறைந்து, தமது பழைய மழவிடை மேல் பார்வதி அம்மையாருடன் ஆகாயத்தில் வந்து காட்சி தந்தனர். தொழும்பனர் தொழுது வீழ்ந்தெழுந்து மெய்மறந்து நின்றனர். கங்கை சடையிற் சூடிய அருட் கூத்தனர் "நம்மிடத்து உனக்குள்ள அன்பின் தன்மையை உலகமெல்லாம் அறியச் செய்தோம்" என்று மெய்யன்பருக்கு தமது திருவருளினைச் செய்தனர். அவரை எஞ்ஞான்றும் துதித்திருக்கும் மீளாநெறியாகிய பெரும் பேற்றினை அன்பனர் நேரே பெற்றனர். இறைவரும் இமையோர் சூழ்ந்து துதிக்க மறைந்தருளினர்.

இது போழ்தில் காண்பவர் கண்களி கொள்ள மண மகனராகிய கலிக்காமனர் மணமனையினிற் புகுந்தனர். மனத் தாலும் நினைத்தற்கரிய அச் செயலை அங்கு கூடியிருந்தவர்பாற் கேட்டு மகிழ்ந்து அரனருள் போற்றினர். இதனைக் கண்டு உய்யும் பேறு நமக்குக் கிடைக்க வில்லையே என்று மனம் தளர்ந்தனர். இறைவன் அருளிய திருவாக்கின் திறம் கேட்டு மனத்தளர்ச்சி நீங்கினர். மணமகளார் புனைந்த மலர்க் கூந்தலை மீளத் திருவருளால் முன் போலப் பெற்றனர். கலிக்காமனர் அவரை மணஞ்செய்துகொண்டு, தக்கவாறு யாவருக்கும் நிதி மழைபொழிந்து, மணமகிழ்ச்சி உல கெங்கும் சிறக்கச்செய்து பெருகிய இனத்தாருடன் தமது நகரத்தினைச் சென்றணைந்தனர்.

## கற்பனை

1. நூற்பயன் நன்குணர்வோராற் பாடப்படுவது நகரங்களுக்குச் சிறப்புத்தருவதாம்.

2. அவ்வவ்விடங்களில் நிகழ்ந்த சிறந்த சரிதக் குறிப்புக்களை அங்குச் சூழ்ந்துள்ள நிலம், நீர், தாவர முதலிய இயற்கைப்பொருள்களே காட்டி நிற்பனவாகக் கண்டு காட்டும் இயல்பு சிறந்த பெருங்கவிகளில் அமைவதாம்,

3. அறத்தினிலையின் சால்புடையது மனையறம். வினைகளிற் சால்புடையது உழவு.

4. விழாக்கள் மலிவது நகரங்களின் சிறப்புக்காட்டும்.

5. அரசர் சேனுபதியாயிருந்தாலும் வேளாளருக்கு உரியது. அவ்வகையில் வழிவழிவரும் குடிகளும் உண்டு.

6. மெய்ப்பொருளை அறிந்துணர்ந்த பெரியோர்கள் சிவபெருமான் தொண்டர்க்கே ஏவல் செய்வர். தம்மையும் தம்பொருள்களையும் அவர்களது உடைமைப் பொருள் என்றெண்ணி அவர் வேண்டுவனவற்றைக் குறிப்பறிந்து கொடுப்பர். இவை பெருஞ்சிவ புண்ணியங்களாய்ச் சிவ வாழ்வைத் தேடிக்கொடுப்பன.

7. சிவபெருமானது வழிபாடு நன்மக்கட்பேறு முதலிய உலக போகப்பயன்களையும் இறுதியில் வீடுபேற்றையுந்தர வல்லது.

8. பெண் மகப்பேறும் ஒருவற்குப் பிறவியினின்றும் பிழைக்கும் உயர் நெறியினைக் கூட்டுவிக்கும்.

9. ஒத்தமரபும் அரன்பால் ஒத்தஅன்பும் உடையார்க்கே உயர்குடிப்பிறந்தோர் மகட்கொடை நேர்வர்.

10. மணத்தாற் பிணைக்கப்படும் இருதிறத்தார்க்கும் நேர்வாய நற்பயன்தரப் பொருந்துமாறு மணநாள் வகுத்தல் மதிநூல் வல்லவர் கடன்.

11. திருநீற்றினை நிறையப்பூசி, எலும்பணிகள், மயிர்க்கயிருகிய பஞ்சவடி, யோகபட்டிகை, திருநீற்றுப் பொக்கணம், கடிசூத்திர உடை முதலியன தாங்கிவருதல் மாவிரதர் என்ற சைவ உட்சமயத்தோர் மேற்கொள்ளும் கோலமாம்.

12. மணமகளைப் பெரியோர் பாற்பணிவித்து அவர்களது ஆசிபெறச் செய்தல் முந்தையோர் மரபு.

13. ஒரு மகளின் மலர்க்கூந்தலை மணநாளில் அடியில் அரிந்து (அடியார்க்கு) மாவிரதியார்க்குத் தரவல்லது உறைப்புடைய பேரன்பின் திறம்.

14. இவ்வாறு பற்றுக்கள் அறக்களையக்கண்ட நிலையே இறைவனை வெளிப்படக் காணும் நிலையாம். அன்பு முறுகி விளைதலின் கண் அருளும் வெளிப்படத்தோன்றும். தமது எஞ்சி நின்ற இடது கண்ணையும் தோண்ட அம்பினை ஊன்றிய போது கண்ணப்பருக்கும், கற்பாறையில் தலையை மோதமுற்பட்ட போது திருக்குறிப்புத் தொண்டருக்கும் இறைவனது வளையணிந்த இடதுகை வெளிப்படத்தோன்றி அச்செயல்களைத் தடுத்துப் பேறுதந்த சரிதங்களும் அவை போன்றனவும் இங்கு நினைவுகூரத்தக்கன.

15. தமது ஒரு மகளாரின் மலர்க்கூந்தலை மணநாளில் அடியோடு அரிந்த அக்கணமே உலகப்பற்று அடியோடு அரித்தெடுக்கப்பட்டதாம். "அற்றது பற்றெனில் உற்றது வீடு" "அற்றவர்க்கற்ற சிவன்" என்பன காண்க.

16. எந்தக் காலத்தில் எப்பொருளைக் கொடுத்தல் பிறர்க்கு இயலாததாகுமோ அதனைக் கொடுத்தலே செயற்கரிய செய்கை. தாமும் மனைவி மக்கள் சுற்றமும் இருபகல் உணவிலாது வருந்திய நிலையில், நெற்கொள்ளக்கொண்டு சென்ற தாலியினைக் குங்கிலியத்திற்கு மாறிய அரிய செய்தியும் உணவிலாது தாம் வருந்தவும், வந்த அடியார்க்கு உணவளிக்க வயலில் விதைத்த நெல்லை வாரியும் வீட்டுக்கூரையை அறுத்தும் அமுது சமைத்த அருஞ்செயலும் அவ்வாறுயின பிறவும் இங்கு எண்ணத்தக்கன.

18. அன்பின் திறத்தை யாவரும் அறியச்செய்து உலகினரை நல்வழிப்படுத்தி ஆட்கொள்ளுதல் சிவபெருமான் பேரருட்டிறம். அடியார்கள்பால் சிவன் வெளிப்பட எழுந்தருளி வந்து செய்யும் பேரருட்டிருவிளையாடல்கள் பலவும் இந்த உள்ளுறை கொண்டன.

மானக்கஞ்சாறநாயனுர் புராணம் முற்றும்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 13. அரிவாட்டாய நாயனர் புராணம்.

(மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ்சாறன்)

## தொகை

"எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்"

## வகை

வள்ளற் பிராற்கு அமுதேந்தி வருவோ னுகலும் "இங்கே
வெள்ளச் சடையாய்! அமுது
செய்யாவிடில் என் தலையைத்
தள்ளத்தகும்" என்று வாட்பூட்டிய தடங்
கையினன் காண்
அள்ளற் பழனக் கணமங்கலத்து அரிவாட்டாயனே

## புராண சாரம்

தாவில் கண மங்கலத்துள் வேளாண் தொன்மைத்
தாயனா நாயனர் தமக்கே செந்நெல்
தூவரிசி என விளைவது அவையே ஆகத்
துறத்துணவு வடுஅரிசிதுளங்கு கீரை
ஆவினில் ஐந்துடன் கொணரக் கமரில் சிந்த
அழிந்தரிவாள் கொண்டு ஊட்டி அரியாமுன்
மா வடுவின் ஒலியும் அரன் கரமுந் தோன்றி
வாள்விலக்கி அமரர் தொழ வைத்தது அன்றே.

## சரிதச் சுருக்கம்

சோழர்களது காவிரிநாட்டில் கணமங்கலம் என்பது ஒரு பதி. அது நீர்வளம், நிலவளம், பயிர்வளம் முதலிய வற்ருற் சிறந்து விளங்குவது. அதில் மிக்க செல்வத்து வேளாளர் குலத்துத் தலைமையராய், மனையறத்தின் வாழ்வா ராய்ச், சிவபெருமானது திருப்பாதங்களைத் தொடர்ந்து பற்று கின்றவராய்த் தாயனுர் என்ற திருநாமம் உடையவராய், ஒரு பெரியார் இருந்தார். அவர் சிவபெருமானுக்கு ஏற்றன என்று செந்நெல் அரிசியும், செங்கீரையும், மாவடுவும் நாள் தோறும் கொண்டு வந்து திருவமுது செய்விப்பாராயினுர்.

இத்திருத்தொண்டினை அவர் வறுமை வந்த காலத்தும் விடாது செய்து வருவார் என உலகுக்குக்காட்டி அதுகொண்டு உலகை உய்விக்கும் பொருட்டு, இறைவர் அவரது வழிவழி வந்த செல்வத்தை அறியாதவாறு மாற்றினுர். அதனுல் அவரது செல்வம் யானையுண்டவிளங்கனி போல உள்ளீடற்று மறைந்தது. அப்போதும் நாயனுர் பாவை பங்கருக்குத்தாம் முன் செய்து வந்த திருப்பணியை முட்டாது செய்து வருவா ராயினர். கூலிக்கு நெல்லறுத்து வாழ்வாராய்ச் செந்நெல் அரிந்த நெந்நெற் கூலியாகக் கிடைத்தனையெல்லாம் இறை வருக்குத் திருஅமுதாக்கினர். கார்நெல் அரிந்த கார்நெற் கூலி கொண்டு தாம் உண்டு வந்தனர். இந்நிலையினையும் மாற்ற இறைவர் திருவுள்ளம் பற்றவே வயல்களிலெல்லாம் நல்ல நீண்ட செந்நெல்லேயாகி விளைந்தன. அவற்றை அறுத்த நெல் கூலியினைக்கொண்டு "இஃது அடியேன் செய்த புண்ணியமேயாகும்" என்று சிந்தை மகிழ்ந்து தாயனுர் அக் கூலியெல்லாம் திருஅமுதுக்கே ஆக்கினர். குறையாத அன் பினையுடைய மனைவியார் உணவுக்காக வீட்டுக் கொல்லையில் உள்ள கீரை வகைகளைக் கொய்து சமைத்து இடப் பெருந்தகை யார் அருந்தித், திருப்பணியை முட்டாது செய்து வந்தனர். மனைப்படப்பையில் உள்ள கீரை வகைகள் தீரவே, வடமீன் அனைய மனைவியார் தண்ணீரை வார்க்க அதனை அன்பனுர் அமுது செய்து முன்போலப் பணிசெய்து வந்தனர்.

ஒரு நாள் இறைவர்க்கு ஊட்ட அவரது அன்பு போன்ற தூய செந்நெல் அரிசியும். பசிய மாவடுவும் கீரையும் தொண்டனுர் கூடையிற் சுமந்து செல்ல, அவர் பின்பு மனைவியார் மட்கலத்தில் ஆனைந்து ஏந்திச் சென்றனர். இவ்வாறு செல்லும் போது திருமேனி வாடியதனுல் கால் தளர்ந்து தப்பித்தாயனுர் வீழ்வாராக, மட்கலம் மூடும் கையினுல் காதலால் மனைவியார் அனைத்தும், கூடையிற் கொண்டவையெல்லாம் கமரிற் சிந்தின. அது கண்டு நாயனுர் " இனி அங்கு ஏன் போதல் வேண்டும்? " என்று வருந்தி " இவற்றை இங்கே அமுது செய்தருளாவிடில் நான் உயிர் வாழ மாட்டேன். என் ஊட்டியை அறுத்துத் தலையைத் வேருகத் தள்ளுவேன் " என்று இறைவரை வேண்டினர். இறைவர் திருஅமுது செய்யத் தாழ்த்தாமைகண்டு "அளவில்லாததீமையுடையேன், இறைவர் அமுது செய்யும் பேறு பெற்றிலேன்" என்று உறுபிறப்பினை அரிவார் போன்று அரிவாள் கொண்டு உள்ளந்தண்டு அறும்படி கழுத்தினை அரியத்தொடங்கினுர்.

கமரினின்றும், அம்பலந்தாடும் ஐயரது வீசியகையும் மாவடு " விடேல் விடேல்" என்ற ஓசையும் உடனே ஒருங்கு எழுந்தன. இறைவரது திருக்கை அன்மரது கழுத்தரியும் திண்ணிய கையினைப் பிடித்துக் கொள்ளவே அவரும் அச்செயல் தவிர்த்தனர். அரிந்த ஊறும் நீங்கியது.

அன்பனுர், அஞ்சலி கூப்பி நின்று அடியேனது அறிவில்லாமையைக் கண்டும் என் அடிமை வேண்டிக் கமரில் வந்து இங்கு அமுது செய்தருளும் பரனே போற்றி! " என்று பலவாறு துதித்து வணங்கினர். இறைவன் இடப வாகனராய்த் தோன்றி " நீ புரிந்த செய்கை நன்று உன் மனைவியுடனே கூட நம்முலகில் என்றும் வாழ்வாயக " என்று அருளிச் செய்து அவர் உடனே நண்ணத் திருவம்பலத்தில் எழுந்தருளினர்.

"இறைவர் அமுது செய்யும் பேறு பெற்றிலேன்" என்று கழுத்தினை அரிவாளினால் அரிதலால் அவர் அரிவாட்டயர் என்ற தூய நாமத்தை உடையாராயினர்.

## கற்பனை :

1. அறநெறிகளில் மனைவாழ்க்கை கொண்ட அறம் தகுதி பெற்றது.

2. ஞாயிற்றின் ஒளிமிகுதி கொண்டு விளைவதால் செந்நெல் குணத்தில் உயர்ந்தது. அது இறைவரது திரு அமுதுக்கும் பெரியோர் அமுதுக்கும் சிறந்தது. அவ்வாறன்றிக் கார்நெல் ஞாயிற்றின் ஒளி குறைந்த காலத்தில் விளைவதால் குணத்திற் குறைந்தது.

3. செந்நெல் அரிசியும், செங்கீரையும் மாவடுவும் இறைவனுக்கு அமுது செய்வித்தல் சிறந்த புண்ணியம்.

4. வறுமையும் துன்பமும் வந்தகாலத்திலும் திருத்தொண்டின் செயலை விடாது செய்வார் பெரியோர்.

5. செல்வமிக்க நிலையில் இருந்த நாயனார் அந்நிலை மாறித்தாம் கூலிக்கு நெல் அரிந்து பிழைக்க நேர்ந்த காலத்தில் அக்கூலி நெற்கொண்டும் திருத்தொண்டினை விடாது செய்த செய்கை உய்தி பெறும் உள்ளமுடைய உலகம் பின்பற்றத் தக்கது.

6. கூலிநெல்லினுள்ளும் தாம் பெற்ற சிறந்த செந்நெல்லை இறைவரது திருவமுதுக்காக்கித், தாழ்ந்தகார் நெற்கூலி கொண்டு தாம் உண்டு வாழ்ந்த நாயனாரது அருஞ்செயல் உலகை உய்விக்க வல்ல சிறந்த உதாரணமாம். சிறந்தனவாக தாந்தாம் கொள்வன வற்றையே இறைவனுக்கு ஆக்குதல் வேண்டும். "விரும்பின கொடுக்கை பரம்பரற்கென்று, புரிகுழற்றே வியைப்பரிவுடன் கொடுத்த, பெரிய அன்பின் வரகுண தேவர் வரலாறு சிந்திக்கத் தக்கது.

7. உணவுக்கென கொண்ட கார் நெல் மாறி, எல்லாம் செந்நெல்லேயாகி விளைந்தது கண்ட நாயனர் தமக்கு உணவுக்கு நெல் இல்லாமையை மறந்து, அவ்வாறு தாம் பெறும் செந் நெற்கூலி முழுதும் இறைவனுக்கே திருவமுதாக்கியதுமன்றி, அவ்வாறு ஆக்கப் பெற்றஇது, தமது பெரும் புண்ணியம் என்று மகிழ்ந்ததும் தாம் கீரையும் தண்ணீரும் உண்டு சீவித்ததும் மிக அறிய பெரிய செயல்கள். இந்நிலைமை கைவரப் பெற்ருர் பெரியார் அவர்களே இறைவன் அருள் பெற உரியார்.

8. கணவனுரோடு ஒருமித்த கருத்துடன் அமைந்து அதற்கு ஏற்றவாறு மனைவாழ்கை நடத்திய நாயனுரது மனைவியாரின் உதாரணம் பெண்ணுலகம் கண்டுப் போற்றிப், பின்பற்றத் தகுந்தது.

9. கணவனுர் கருத்தமைந்து அவரது திருப்பணியில் ஒன்று கூடி ஒழுகிய ஒழுக்கமே நாயனுரது மனைவியார்க்கு அவரைப் பிரியாத நிலையிற் சிவலோகப் பெருவாழ்வும் தேடித் தந்தமை உலகம் கண்டு போற்றத் தக்கது. "மாதரொடு மாடவர்கள் வந்தடியிறைஞ்சி நிறை மாமலர்கள் தூஉய்க் கோதைவரி வண்டிசை கொள் கீதமுரல்கின்றவளர் கோகரணமே" ஆளுடையபிள்ளையார் தேவாரம் சிந்திக்கத்தக்கது.

10. இறைவர் எங்குமுள்ளார் என்றறிந்த ஞானிகள் அவரை எவ்விடத்தும் முந்நிலையாக்கிக்கொண்டு வழிபடுவர் இறைவர் தம்மை வழிபடுவோரின் பக்குவத்துக்கேற்றவாறு அங்கங்கும் வெளிப்பட்டு அருள் புரிவர்.

11. தாம் நியதியாகச் செய்து வந்த திருத்தொண்டுக்கு முட்டுப்பாடு நேர்ந்த போது பெரியோர் உயிர்வாழத்தரியார்.

12. அன்புகாட்டிய நெறியிற் செய்யப்பட்ட போது, தற்கொலையும், அற நூலால் விலக்கப்பட்ட பாவமாகாமல், பெரியோர்களாலும் போற்றப்பட்ட புண்ணியமேயாம். இந்த அன்புச் செயல் சிவனிடமாகச் செய்யப்பட்ட போது வீட்டுக்கு வாயிலாகும்,

அரிவாட்டாயநாயனுர் புராணம் முற்றும்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 14. ஆனாயநாயனார் புராணம்

## தொகை

" அலைமலிந்த புனன்மங்கை ஆனாயர்க்கு அடியேன் "

## வகை

தாயவன் யாவுக்குந் தாழ்சடை மேற்றனித் திங்கள்
வைத்த
தூயவன் பாதந் தொடர்ந்து தொல் சீர்துளையாற் பறவும்
வேயவன் மேன்மழ நாட்டு விரிபுனன் மங்கலக் கோன்
ஆயவன் ஆனாயன் என்னை உவந்தாண்டருளினனே.

## புராண சாரம்

மங்கல மாமழ நாட்டு மங்கலமா நகருள்
மருவு புகழ் ஆனாயர் வளர் ஆமேய்ப்பார்
கொங்கலர் பூந்திருக் கொன்றை மருங்கு சார்ந்து
குழலிசையின் ஐந்தெழுத்தும் குழையவைத்துத்
தங்கு சராசரங்க ளெல்லாம் உருகா நிற்பத்
தம்பிரான் அணைந்து செவிதாழ்த்தி வாழ்ந்து
பொங்கிய வான் கருணை புரிந்து 'என்றும்
ஊதப் போதுக என்று அருளவுடன் போயினரே

## சரிதச் சுருக்கம்

சோழ நாட்டின் ஓர் உட்பகுதியாகிய மேன்மழநாடு என்பது நீடும் வளத்தினையுடைய நீர் நாடாம். அதில் தாமரைகள் பூத்த நீர் நிலைகளும் குளிர்ந்த தேமாஞ் சோலைகளும் உண்டு. கமுகு, வாழை முதலியன அந்நாட்டினின் மிகுந்தப் பயிர்கள். இவ்வாறுள்ள மருதத்தினைச் சூழ்ந்து ஒரு புறம் காடாரம்ப மாகிய முல்லைப்பகுதியும் உண்டு. இவ்விரண்டும் ஒன்று கூடுவதால் இவற்றின் ஒழுக்கமும் பொருள்களும் ஒன்று கூடி மயங்கிய திணை மயக்கமும் இங்குக் காணத்தக்கது.

இப்படித்தாகிய மேன்மழநாடு மண்ணுலகிற்கு அருங்கலம் போல உள்ளது. அதற்கு மங்கலமாகியது **திருமங்கலம்** என்ற அதன் வாழ் மூதூராகும். அப்பதியில் நீடிய பெருங்குடிகளுள் ஒன்ருகிய **ஆயர்** குலத்தின் குலவிளக்குப் போல **ஆனாயர்** என்ற பெரியார் அவதரித்தார். அவர் தூய திருநீற்றினை விரும்பும் திருத்தொண்டில் நின்றவர். மனமொழி மெய் என்ற முக்கரணங்களாலும் சிவபெருமான் திருவடிகளை யல்லாது வேறென்றினையும் பேணாதவர். தமது குழத் தொழிலாகிய பசுக்காத்தலைச் செய்வாராய்ப் பசுக்களைச் சேர்த்து, அகன்ற புறவிற் கொண்டு சென்று, அச்சமும்-நோயும் அனுகாமற் காத்து, அவை விரும்பிய நல்ல புல்லும் நன்னீரும் ஊட்டிப், பெறுகுமாறு காத்து வருவார். இளங் கன்றுகள், பால் மறை நாகிளம் பசு, கறவைப்பசு, சினைப்பசு, புனிற்றுப்பசு, விடைக்குலம் என்பனவாக அவற்றை வெவ் வேறு பகுத்துக் காவல் புரிவார் இவ்வாறு ஆனிரைக் காத்துத் தம் சொல்வழிக் கோவலர் தொழில் புரிந்து வர நின்ற இவர், சிவபெருமான் திருவடியில் அன்பு பொருந்திய இசையினை யுடைய துளைக்கருவிக்குழல் வாசித்தலை மேற்கொண்டொழு கினர். இசை நூல் விதிப்படி அமைந்த வேய்ங்குழலில் சிவ பெருமானது திருவைந்தெழுத்தையும் எழிசையின் சுருதி பெற வாசித்துச் சராரசங்களெல்லாம் தமது கருணை பொருந்தக் குழலிசையமுதம் அளித்துவருவாராயினர்.

இப்படி நியதியா ஒழுகுபவர், ஒருநாள், தமது கழியிற் கண்ணி செருகி, நறுவிலி புனைந்து, கருஞ்சுருளின் புறங்கட்டி, வெண்காந்தட் பசிய இலைச் சுருளிற் செங்காந்தட் பூவினை வைத்துக் காதில் அணிந்து, கண்டோர் மனங்கவரத் திரு நெற்றியில் திருநீற்றினை ஒளிபெற இட்டு, அதனைத் திருமேனி யிலும் மார்பிலும் பூசி, முல்லைமாலை அணிந்து இடையில் மரவு ரியுடுத்து, அதன்மேல் தழைப் பூம்பட்டுத் தானை அசையக் கட்டி, திருவடியில் செருப்புப் பூண்டு கையினில் வெண்கோலும் வேய்ங்குழலும் விளங்கக் கொண்டு, கோவலரும் ஆவினமும் சூழப்பசுக்காக்கப் புறம் போந்தார்.

போந்த அவர் அங்கு மாலை போன்ற பூங்கொத்துகளும் கனிகளும் நிறைந்ததொரு கொன்றையினைக் கண்டார். அது மனத்துள்ளே எப்போதும் கண்டுகொண்டிருந்த சடையிற் கொன்றை மாலை சூடிய சிவபெருமானைப் போல அவருக்குத் தோன்றிற்று. தோன்றவே அதனை நேர்நோக்கி நின்று உருகினர். ஒன்று பட்ட சிந்தையில் ஊறிய அன்பு தம்மை யுடையவர் பால் மடை திறந்த நீர்போலப் பெருகிற்று அன்பு உள்ளூறிப் பொங்கிய அமுத இசைக் குழலோசையில் சிவ பெருமானது திருவைந்தெழுத்தினையும் உள்ளுறையாக அமைத்து, எல்லா உயிர்களும் எலும்புங்கரையும்படி வாசிக் கத்தொடங்கினர். நூல்விதிப்படி அமைந்த வங்கியம் என் னும் வேய்ங்குழலின் தனித்துளையில் ஆனுயர் மணி அதரம் பொருந்த வைத்து, ஏழிசை முறைப்படி இசை இலக்கணம் எல்லாம் அமையச்செய்து. திருவைந்தெழுத்தை உள்ளுறை யாகக் கொண்ட குழல்இசை ஒலியை எம்மருங்கும் பரப்பினர். அது கற்பகப்பூந்தேனும் தேவாமுதமும் கலந்து வார்ப்பது போல எல்லா உயிர்களுள்ளும் புகுந்துதேக்கிற்று,

ஆனிரையும் கான்விலங்கும் இசைவயப்படுத்தும் உணவும் மறந்து மயிர் மகிழ்ந்து வந்தணைந்தன. ஆடும் மயிலினமும் மற்றைப்புள்ளினமும் தம்மை மறந்து இசை நிறைந்த உள்ளமொடு படிந்து வந்தணைந்தன. ஏவல்புரி கோவலரும் தம்தொழில் செய்தலை மறந்து நின்றனர். பாதலத்தின் நாகர்கள் மலையின்வாழ் அரமகளிர் விஞ்சையர்-

கின்னரர் முதலிய தேவகணங்கள்—தேவமாதர்கள் என்றிவர்களும் குழலிசையின் வசப்பட்டவராகித் தத்தம் உலகங்களினின்று வந்து அணைந்தனர். நலிவாரும் மெலிவாரும் தம்மியல்பு மறந்து இசையுணர்விஞகிய உணர்ச்சி ஒன்றேயாகி நயத்தலினுல், அரவும், மயிலும், அரியும்—கரியும், புலியும்—மானும் என்றித்திறத்தனவாகிய உயிர்வகைகள் தத்தமது பகைமையை மறந்து ஒன்று கூடிவந்து கூடின. காற்றும் விசையில் அசையா, மரமும் சலியா. மலைவீழருவிகளும் கான்யாறும் கலித்தோடா, வான்முகிலும் ஆழ்கடலும் அசையா இவ்வாறு நிற்பனவும் சரிப்பனவும் ஆகிய எல்லாம் இசைமயமாகிப் புலனும் கரணமும் ஒன்ருயின.

ஆனுயர் இசைத்த குழலிசையானது வையத்தை நிறைத்தது. வானத்தையும் தன்வசமாக்கிற்று மேல் ஐயரது திருச்செவியினருகணையவும் பெருகிற்று. சிவபெருமான் இடபவாகனத்தில் மேல் உமையம்மையாருடனே எழுந்தருளி எதிர் நின்று காட்சி தந்தனர். அக்குழல் வாசனைக் கேட்க "இந்நின்ற நிலையே நம்மிடத்தில் அணைவாய்" என்றருளிச் செய்தனர். தேவர்கள் பூ மழைப் பொழிய முனிவர்கள் துதிக்கக் குழல் வாசித்துக்கொண்டே அந் நின்ற நிலைபெயர்ப்பாராய் ஆனுயநாயர் உடன் செல்லச் சிவபெருமான் பொன்னம் பலத்துள் எடிந்தருளினர்.

## கற்பனை,

1. நீர்வளம், நிலவளம் மிகுதியாயின் சில்லறிவுகளுடைய வண்டு, கயல், மேதி முதலிய பிராணிகளும் சுக வாழ்கையான இருககைகளைத் தேடி அடைவன.

2. நீரின் அலையில் வரும் சில சங்குகள் தவழ்ந்து மரங்களின் உச்சியினும் ஏறித்தங்கும் இயல்புடையன.

3. ஆன்கன்றும் மான்கன்றும் வெவ்வேறு நிலத்தனவாயினும் ஓரினத்தைச் சார்ந்தன வாதலின் தம்மில் உறவு

கொள்ளும் தன்மையுடையன. அதுபோல அறிவோரும் நல்லோரும் எந்நிலத்தாராயினும் கூடிய போது உறவு பூண்பர்.

4. வெவ்வேறியல்பினவாகிய முல்லை, மருதம் முதலிய திணை நிலங்கள் அடுத்தடுத்துள்ள போது ஒன்றன் ஒழுக்கமும் பொருள்களும் மற்றொன்றில் வந்து கலந்து விரவவும்படும்.

5. ஒரு குலத்தில் ஒரு பெரியார் அவதரிப்பாராயின் அவரால் அக்குலமுழுவதும் விளக்கம் பெறும்

6. மனம், வாக்கு காயம், என்ற மூன்று கரணங்களாலும் சிவபெருமான் திருவடிகளை அல்லது பிறிதொன்றினையும் பேணார் பெரியோர்

7. ஆனிரைகளை அகன் புறவிற்கூடக் கொண்டு சென்று அவற்றுக்குத் தீயவிலங்குகளாலும் நோய்கலாலும் வரும் ஏதங்களை நீங்கிக் காத்து, நல்ல புல்லுணவும் நல்ல நீரும் ஊட்டி அவை பெருதம்படி வளர்த்துக் காத்தல் பசுக்காக்கும் முறை.

8. இளங்கன்றுகள்—பால்மறை நாகு—கறவைப்பாற் பசு, சினைப்பசு — விடைக்குலம் என்றிவ்வாறு ஆனிரைகளை வெவ்வேறு வகுத்துப் புறவில் மேய்த்தும், தொழுவங்களிற் சேர்த்தும். வளர்த்தலும் பசுகாக்கும் முறையாகும்.

9. ஆனிரைகாப்போர் வேய்ங்குழலிசை வாசித்தலும் வழக்கு, அது பசு காத்தலுக்கும் துணைசெயயும் இயல்புடையது

10. சிவபெருமானது மகாமந்திரமாகவும் எல்லா மந்திரங்களுக்கும் மேலாகய ஆதிமந்திரமாகவும் உள்ளது. சிவநாயமந்திரமாகிய திருவைந்தெழுத்தேயாகும்.

11. திருவைந்தெழுத்தை சிவனிடத்து இடையருது பெருகும் மெய்யன்புடன் உள்ளம் கசிந்து ஓதுவோர் சிவானந்தப் பெருவாழ்வாகிய முத்தியை அடைகுவர்.

12. சிவநாமமாகிய திருவைந்தெழுத்தை உள்ளுறையாகக்கொண்டு இசை நூல் விதி தவருது ஏழிசையின் சுருதி பெற விதிப்படி அமைந்த வேய்ங்குழலால் வாசித்தல், அதனை வாசிப்போருக்கும் கேட்போருக்கும் சிவபெருமானிடத்தில் அன்பு வளரும்.

13. இசை நூல் விதிப்படி வேய்ங்குழலில் மெய்யன்புடன் திருவைந்தெழுத்தை வாசிக்கும் இன்னிசை எல்லா உயிர்களையும் தன்வயமாக்கி உருகுவிக்கவல்லது. சிவபெருமான் திருச்செவியினருகணையப் பெருகி அவரை எதிர் வந்து அருளச் செய்யவும் வல்லது.

14. அசேதனங்களாகிய காற்று, அருவி, முகில், கடல் முதலியனவும் இசை நூல் விதிப்படி வேய்ங்குழலில் திருவைந்தெழுத்தை அமைத்து அன்புடன் ஊதப்படும் குழலிசையின் வசப்பட்டு நிற்பன என்ருல், அறிவுடைய சராசரங்களாகிய ஏனை உயிர்கள் ஈடுபடுதல் ஆச்சரியமன்று.

15. ஒன்றுக்கொன்று பகைமையுடைய உயிர்களும் வேய்ங்குழலின் தெய்வ இசையமுதின் வசப்பட்டபோது தத்தம் பகைமையை மறப்பனவாகும். கொடிய பாம்பு, புலி, முதலியனவும் குழலின் இசையின் வசப்பட்டுத் தம்மை மறப்பனவாகும். இன்னிசையானது பிராணிகளிடத்து நோய் நீக்கம், கொடுமை நீக்கம், பசி நீக்கம், துன்பநீக்கம் முதலியவற்றுக்கும் நற்பயன் பெறுதற்கும் காரணமாம்.

16. இசைக்கலைக்கும் மற்றும் எல்லாக் கலைகளுக்கும் ஆதிகாரணர் சிவபெருமான்.

ஆனாயநாயனார் புராணம் முற்றும்
இலைமலிந்த சருக்கம் முற்றிற்று.

---



